# "The Bala Sanmarga Bodini."

By Mrs. JAGANATHA IYER.

# பாலர் சன்மார்க்க போதினி.



இஃது

ஜி. மீனாக்ஷி அம்மாளால்

எழுதப்பெற்று,



மதுரை வடக்குமாசி வீதி

ஷண்முக விலாசம் பிரஸில்,

பதிப்பிக்கப் பெற்றது.





Price 12 as.

1918

# "The

# Bala. Sanmarga Bodini."

BY MRS. JAGANATHA IYER.

# பாலர்

# சன்மார்க்க போதினி.

இஃது

ஜி. மீனாக்ஷி அம்மாளால்

எழுதப்பெற்று,





மதுரை வடக்குமாசி வீதி

ஷண்முக விலாசம் பிரஸில்,

பதிப்பிக்கப்பெற்றது





விலை அணா **12** **Price 12 as.**

**1918**

# இதிலடங்கிய

## விஷயங்கள்.





# முகவுரை.



கனம் நம் சகோதரசகோதரிகளே!—இந்தியாவில் அனாதியிலிருந்து தோன்றின மகாத்மாக்களாகிய நம்பெரியோர்களை அனுசரித்து வந்த மார்க்கமே உண்மையென்றும் மத்தியில் அநேக ஜனங்களால் ஏற்படுத்தப்பட்ட மார்க்கம் அவ்வளவு உண்மையல்லவென்றும் அநேகருக்கு தெரிந்தவிஷயமே.

அப்படியிருக்க தற்காலம் நமது சிறுவர்களுக்கு கல்வியாரம்பத்திலேயே சன்மார்க்க போதனைகள் போதிக்கவேண்டியது அவசியம். அவ்விதம் சன்மார்க்க போதனை போதிக்க, மதவிஷயமான சிறு புஸ்தகங்கள் குறைவாயிருப்பதால் அவர்களுக்கு போதிக்கவேண்டிய கடமை நம்முடையது.

அவர்கள் இகபரத்தில் சுகமடையும்படி நம் மதத்தில் சொன்னபடியே நடப்பது உத்தமமென்று தெரிந்துக் கொண்டிருக்கிறோம். அப்படித் தெரிந்துக்கொண்ட சில விஷயங்களை சம்பாஷனை ரூபமாக ஓர் புக்தகமெழுதி அதற்கு பாலர் சன்மார்க்க போதினி யென்று பெயரிட்டு அச்சிடப்பட்டிருக்கிறது. இப்புஸ்தகத்தை பார்வையிடும் பெரியோர்களும், கற்றவர்களும் இதில் பெரும்பான்மையாயுள்ள குற்றங்களை நீக்கி, சிறும்பான்மையாயிருக்கும் நற்குணங்களைக் கொண்டு நமதுசிறுவர்களுக்கு போதிக்கவேண்டுமென்று கோருகிறேன்.

ஏனெனில், எவ்விதமான நூலிலும் ஒருவேளை குற்றம் கண்டுபிடிக்கக்கூடும் சாதாரணமாய் என்போன்ற பேதை எழுதியிருக்கும் இந்நூலிற் பலகுற்றமிருப்பது அதிசயமன்று.

மேலும், சிறுவர்களுக்கு போதிக்கும்போது தங்கள் தங்கள் யுக்திக்கும், புத்திக்கும் பொருந்திய சத்விஷயங்களைச்சேர்த்தும் போதிக்கலாம். எவ்விதமாயினும் நமது சிறுவர்கள் இகபரத்தில் சுகமடைய வேண்டுமென்பதே நமதுகருத்து.

சம்பாஷனை ரூபமாயெழுதிய கருத்து யாதெனில், நம் சிறுவர் உற்சாகப்பட்டு அடிக்கடி பெரியோர்களைக்கேட்டு விஷயங்கள் தெரிந்துகொள்ள ஏதுவாயிருக்குமென் றெழுதினது.

1918ஆம் மேமீ 17உ

இங்ஙனம்,
G. மீனாக்ஷி அம்மாள்,
மதுரை.

ஸ்ரீராமஜெயம்.

# இந்து மார்க்கம்.

## 1-வது; அத்தியாயம்.

அகண்ட பரிபூரண சச்சிதானந்தக் கடவுளின் சிருஷ்டிப்புக்குள் மிகவும் உத்தமமானது இப்பரதகண்டமென்று மெய்ஞ்ஞான சொரூபமுள்ள மகான்கள் பலவிதமான கிரந்தங்களின் மூலமாய் நமக்குத் தெரிவித்திருப்பதால் இதில் பிறந்தவர்களே சகலசுகபோக பாக்கியங்களையும் அடையக்கூடியவர்களென்றும் மானஸ பூமியாகிய சுவர்க்கமடையும் பொருட்டு இப்பூமியிலேயே நற்கருமம் செய்யவேண்டுமென்றும் மேலும் இப்பூமியில் பிறந்தவர்களே எல்லையில்லா மோக்ஷானந்தம் அடைகிறார்களென்றும் நாம்பிரத்தியக்ஷமாய் தெரிந்து கொள்ளுகிறோம். இப்பேர்ப்பட்ட புண்ணியபூமியாகிய பூமாதேவிக்குத் திலகம்போன்ற ஞானபூமியாகிய ஹாலாஸ்யக்ஷேத்திரத்தில் பின்வருமாறு சத்விஷயங்கள் சம்பாஷணை ரூபமாய் துவக்கப்பட்டு முடிவாகிறது.

மாசில்லாக் குலத்திலுதித்த மங்கை யொருவள் தன்னன்புள்ள பாலனுக்கு சன்மார்க்கம் போதிக்கும் பொருட்டு விஸ்தாரமான தன் வீட்டின் நிலாமுற்றத்தில் சிற்சில விஷயங்களைக் குறித்து யோசித்துக்கொண்டிருந்தாள். அச்சமயத்தில் தன் பாலனானவன்

வழக்கம்போல் தன்னிடத்தில் வந்து சாவகாசமாய் உட்கார்ந்து கொண்டான். அப்படியிருந்த தன் மகனை அன்பினு லருகிலழைத்து வழக்கம்போல் பாடம்படித்தாயா என்றும் கணக்குகள் முடித்தாயா என்றும் வினவினள். மேலும் சிலகாலமாக எதையோ குறித்து நீ யோசித்துக்கொண்டிருப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது இஃதுண்மைதானாவென்றாள்.

மகன்—என்பேரில் பக்ஷமுள்ள தாயே! தாங்கள் கேட்ட கேள்விக்கு விடை யளிக்கிறேன். என்னவென்றால் நான் பாடம்முடித்துகணக்கும் முடித்துவிட்டேன். நான் பல விஷயங்களைக் குறித்து தெரிந்துகொள்ள வேண்டுமென்று யோசித்திருந்தது வாஸ்தவம்தான்.

தாய்—என்னென்ன விஷயத்தைக் குறித்து தெரிந்து கொள்ளவேண்டும்.

மகன்—உலக சிருஷ்டிப்பு அதிலுள்ள விநோதமான அலங்காரங்கள் அது கடைசி காலத்தில் ஒடுங்கும் விதம் அதைச் சார்ந்த பல விஷயங்களும் பல மதங்கள் ஏறபட்ட விதங்களும் தெரிந்து கொள்ளவேண்டும்.

தாய்—நீ சொன்ன விஷயங்கள் ஒன்றாய் ஏககாலத்தில் சொல்ல முடியாது. ஆகையினால் நீ தனித்தனி கேள்விகள் கேட்டுக்கொண்டே வந்தால் உனக்குச்சந்தேகம் தீரும்படி விடையளிப்பேன்.

மகன்—சரி, அப்படியே செய்கிறேன். முதலில் மத விஷயம் சொல்லவேண்டும். மதம் என்றால் இருமாப்பென்றல்லவா அர்த்தம் அதன் கருத்தென்ன?

தாய்—அப்பா அதன் விபரம் சொல்லுகிறேன் கவனமாய்க் கேள். மதம என்ற பதத்திற்கு கடவுளை ஆராதிக்கும் வழி என்று அர்த்தம்.

மகன்—எப்படி கடவுளை ஆராதிக்கிறது?

தாய்—அப்பா கடவுளை ஆராதிக்கும் விதம் நம் முன்னோர்களாகிய முனிசிரேஷ்டர்கள் காட்டில் வெகு காலம் அன்னாகாரம் இல்லாமல் யோக மகத்துவத்தினால் காற்றை புசித்துக்கொண்டு பரிசுத்த மனத்தினராய் கடவுளை நோக்கி தவம் செய்து அவருடைய அருள் பெற்று மெய்ஞ் ஞான மடைந்து பல வகுப்பிற்கும் தகுந்தபடி பல கிரந்த புத்தகங்கள் எழுதினார்கள். அதில் நமக்குத் தேவை யானதைச் சொல்லுகிறேன் கேள்.

மகன்—கடவுள் என்று சொன்னீர்களே அவர் எப்பொழுது உண்டானார்? எங்கே யிருப்பவர்? எவ்வித ரூபமுள்ளவர்? எவ்வகை இலக்ஷணமுடையவர்? இந்த விபரங்களை யெல்லாம் எனக்குவிளக்கிச் சொல்லவேண்டும்.

தாய்—கடவுள் ஒரு காலத்திலும் உண்டானவரல்லர் எப்பொழுதும் அழியாதவர். அவருக்கு ஒரு ரூபம் என்று சொல்ல முடியாது. அவருடைய இலக்ஷணம் சத்துச் சித்தானந்தம். சத் என்றால் சதா இருப்பவர் சித் என்றால் சடம் அல்லாதவர் ஆனந்தம் என்றால் துக்கமற்றவர். இப்பேர்ப்பட்ட சச்சிதானந்தக் கடவுள் எப்பொழுதும் எங்கும் உயிருக்குயிராய் நிறைந் திருப்பதினால் பரிபூரண மென்னும் நாமதேயமுடையவர்.

மகன்—கடவுள் என்று ஒரு பெயர் அவருக்கு எப்படி வந்தது?

தாய்—எப்படி யென்றால் மூலப் பிரகிருதி என்னும் மாயையினிடத்தில் உண்டான பொருள்களெல்லாவற்றையும் கடந்து அப்பால் செல்லக்கூடிய சக்தி அவருக்கே உண்டு. எல்லாவற்றையும் கடந்து செல்லக் கூடியவர் என்னும் பொருள் பட கடவுள் என்று சொல்லப்படுகிறது. இன்னும் அவருக்கு அநேக பெயர்களுமுண்டு. அஃதென்னவெனின் நித்தியரென்றும் நிர்மலரென்றும் நிற்குணரெனறும் நிராமயமென்றும் நிராகார சொரூபரென்றும் ஆதியென்றும் சோதியென்றும் இவைபோன்ற அநேகம் பெயர்களுண்டு.

மகன்—சரி. ரூபமில்லாதவரை நாம் எப்படி ஆருதிக்கிறது?

தாய்—அதன் விபரமும் சொல்லுகிறேன். சிருஷ்டி, திதி, சம்மாரமென்னும் முத்தொழிலும் அவரே நடத்தக்கூடியவர் ஆகையினால் சிருஷ்டிக்கும்பொழுது பிரம்மதேவராயிருந்து சிருஷ்டிப்பார் விஷ்ணுரூப மெடுத்துக்கொண்டு இரட்சிப்பார் பரமேஸ்வர ரூபமெடுத்துக்கொண்டு சம்ஹாரம் செய்வார். அதனால் மும்மூர்த்திகளையே வணங்கி ஆராதனைசெய்து மோட்சமடைய வேண்டுமென்று மகான்கள் நமக்குத் தெரிவித்தார்கள்.

மகன்—கடவுளை வணங்காவிட்டால் தோஷமென்ன?

தாய்—மூலப்பிரகிருதியென்னும் மாயையினிடத்தில் ஜீவாத்மாக்கள் அடங்கியிருக்கிறபடியால் அந்த பந்தங்களிலிருந்து நாம் விடுபட்டு மோட்சமடையு நிமித்தம் நமக்கு தேகம் கொடுத்து இரட்சிக்கிறபடியால் அவரை வணங்க வேண்டும். அப்படி வணங்காவிட்டால் நன்றிகெட்டுமேலும் மேலும் துக்கத்தையே அடைந்துகொண்டு வருவோம். அஃதப்படி சம்பவிக்காமல் நாம்அடிக்கடி ஜாக்கிரதையாயிருந்து கடவுளைத் துதித்து அவரதருள்பெற்று அவரிடம் செல்லவேண்டும்.

மகன்—அம்மா! அன்னிய மதக்காரர்கள் இந்துக்களில் ஆண் தெய்வமென்றும் பெண்தெய்வமென்றும் அஞ்ஞானத்தினால் பல தெய்வங்களை வணங்குகிறார்களென்று நம்மை பரிகாசம் செய்கிறார்களே ஏன்?

தாய்—அவர்கள் அறியாமல் அப்படிச் சொல்லுகிறார்கள். நான உனக்கு விபரமாகச் சொல்லுகிறேன் கேள். மேற்கூறிய பிரம்மா என்று சொன்ன கடவுளிடத்தில் சகல கலைஞ்ஞானமும் அடங்கியிருக்கிறபடியால் கல்விக்கு அதிதேவதையான சரஸ்வதி அவரிடத்திலேயே அடங்கியிருக்கிறாள். அதனால் சரஸ்வதியை பிரம்மாவுக்கு பாரியையென்று சொல்லுவதேதவிற உண்மையாக அவளுக்குத் திருமங்கலியஞ் சூட்டி இல்லற தர்மம் நடத்தக் கூடியவ ளல்லவென்று நீ அறிய வேண்டும்.

மகன்—மேற்கூறிய சரஸ்வதியை அதிதேவதை யென்று சொல்வதற்கு ஆதாரமென்ன? ஆண்தேவதை அதிதேவதையா யிருக்கக் கூடாதா?

தாய்—இதைக் குறித்துச் சொல்ல வேண்டுமாயின் வெகுதூரம் வளரும் ஆகையினால் சுருக்கமாகச் சொல்லுகிறேன். கல்வியை ஒருவருக்குபோதிக்கும்பொழுது சப்தரூபமாக போதிக்கப் படுகிறது. அந்த சப்தத்திற்கு நாதம் என்று அர்த்தம். ஆகையினால் நாதரூபம் ஸ்திரீயான சரஸ்வதி யென்று சொல்லப்படுகிறது. அந்த நாத சொரூபம் பெண்ணென்றும் உனக்கு அனுபவத்தினாலும் அநேக கிரந்தங்கள் படிப்பதினாலும் நன்றாய்த் தெரியவரும். கலைவாணி அந்த நாதத்திற்கு அதிபதி யாகையினால் பெண்ணென்று

சொல்லப்படுகிறது. மேலும், லக்ஷ்மி, பார்வதி, இவர்களுடைய விபரமும் தெரிவிக்கிறேன். மகா விஷ்ணு இரட்ச கர்த்தா வாதலால், அஷ்ட ஐஸ்வரியத்திற்கும் அதிதேவதையாகிய லக்ஷ்மி யை இருதயத்தில் வைத்திருப்பதால் லக்ஷ்மி யை மார்பில் வைத்தாரென்று சொல்லப்படுகி றது. பரமசிவன், சங்கார கர்த்தாவாகையால் சக்திஸ்வரூபமாகிய பார்வதியை பாதிதேகத்தில் தரித்தார். அதனால் பாதியாள் என்கிறதற்கு அர்த்தமாக பத்தினிக்கு, பாரியாள் என்று மருவிவந்தது. இதனால் இப்பொழுது நீ தெரி ந்துகொள்ளவேண்டிய தென்னவென்றால், உல கம் முழுவதும் படைக்க, பரிபூரணமான கலைக் ஞானம் வேண்டியபடியால் ப்ரம்மா சரஸ்வதி யை நாவில் தரித்தாரென்றும், விஷ்ணு ரட்சகர் த்தாவாதலால் லட்சுமியை மார்பில் தரித்தா ரென்றும், சங்கார கர்த்தாவாகிய சங்கரர் சக்தி யை வாமபாகத்திற் தரித்தாரென்றும், நீ தெரிந் துகொள்ளவேண்டும். மேலும், இதிலுள்ள சூட் சுமம் என்னவென்றால் சூரியனைவிட்டு ஒளி வே றாகாது, அதுபோல் காரணரூபமாகிய கடவுளி டத்தில் காரிய ரூபமானது வேறாகாமல் அடங்கி யிருக்கும். அதனால் நாம் ஸ்திரீதேவதைகளை ஆராதித்தால் அது தப்பல்ல.

மகன்—சரி, அப்படியானால் ப்ரம்மாவுக்கு பூலோகத் தில் ஆலயமில்லை, ஆகையால் அவரை எப்படி வணங்குகிறது?

தாய்—அதற்காக அவருக்குத் திருப்தி யுண்டாகும் பொருட்டு, ப்ராமணர்களால் காயத்திரி ஜெபம் செய்யப்படுகிறது.

மகன்—ஸ்திரீகள் காயத்திரி ஜெபம்செய்வதில்லையே ஏன்? மேலும் சூத்திரர்கள் என்னசெய்வார்கள்

தாய்—ஸ்திரீகள் பிரஜைகளைப் பெறுவதிலும் சூத்திரர்கள் பிராமணர்களுக்கு சிசுருஷை செய்வதிலும் காயத்திரி பலனை அடைகிறார்கள். அதே போதுமானது,

மகன்—நம்முடைய மார்க்கத்தில் சூரியனை வணங்குகிறார்களே அது ஏன்?

தாய்—சூரியனை வணங்குவது நன்றியறிதலைக் காட்டுகிறது. எப்படி யென்றால் சூரியனால் நமக்கு அநேகவித உபகார மிருக்கிறபடியால் நாம் சூரியனை ஆராதிப்பதும் உசிதமே.

மகன்—மேலே திரிமூர்த்திகளை வணங்கவேண்டுமென்று சொன்னீர்களே. இப்பொழுது சூரியனை வணங்கவேண்டுமென்றால் ஒன்றுக்கொன்று வித்தியாசமாயிருக்குமே.

தாய்—வித்தியாசம் ஒன்றுமில்லை. எப்படியென்றால் நன்றாய் விளங்கும்படி தெரிவிக்கிறேன், ஒரு தேசத்தில், ஒரு அரசன் செங்கோலாகிய ஆக்ஞச்சக்ரம் செலுத்தும்பொழுது, அநேக பட்ட

ணங்களில், தனக்குப் பிரதிநிதியாக 'வேலைகள் செய்யும்படி அநேக அதிகாரிகளை நியமிக்கிறான். அப்படி நியமித்த அதிகாரிகள் அந்தந்த பட்டணத்திலிருந்துகொண்டு, ப்ரஜைசளுக்கு அரசனால் செய்யவேண்டிய உபகாரமனைத்தையும், மேற்கூறிய உத்தியோகஸ்தர்களே செய்துவருவார்கள். இப்படி உபகாரம் பெற்றுக்கொண்ட பிரஜைகள், இந்த அதிகாரிகளுக்கு நன்றிசெலுத்துவார்கள். அப்படி நன்றி செலுத்துவதினால், அரசனை விட இந்த அதிகாரிகள் மேலானவர்கள் அல்லவென்று நமக்குத் தெரியும். மேலும் ஒரு மனிதன், மற்றொரு மனிதனுக்கு உபகாரம் செய்தால், உபகாரம் செய்தவனுக்கு நன்றி செலுத்துவதும் நியாயமே நாம் சூரியனை ஆராதிக்கும்பொழுது உச்சரிக்கும் மந்திரங்கள் மூலகாரணமான பரம்பொருளைக்குறித்தே உச்சரிப்பார்கள். மேலும் கடவுள் உலகத்தை உண்டாக்கி நாளுங்கோளும் அவரே நன்றாய்ப் பிரித்து இன்னஇன்னதற்கு இப்படிச் செய்யவேண்டுமென்று விதித்ததினால் அப்படிச் செய்யவேண்டியதும், நம்முடைய கடமை என்று நீ தெரிந்து கொள்.

மகள்—அம்மா! வெகு நன்றாயிருக்கிறது. சூரியன் தெய்வமுமல்ல மனிதனுமல்ல. ப்ரகாசமா யெரிந்து கொண்டிருக்கும், ஓர் அக்கினிக்கோளமென்று நாங்கள் படிக்கும், பூகோள சாஸ்திரத்

தில் சொல்லியிருப்பதால் அப்பேர்ப்பட்ட ஜட மான ஓர் அக்கினிக்கோளத்தை ஆராதிப்பது அறிவீனமல்லவா?

தாய்—நீ படிக்கும் பூகோள புஸ்தகத்திற்கும், நம் முடைய சாஸ்திரத்திற்கு வெகு தூரம் வித்தி யாசமிருக்கிறது.

மகன்—ஆமாம்மா, பூகோள விஷயம் பள்ளிக்கூடத் தில் எங்களுக்குச் சொல்லிக்கொடுக்கும் பொ ழுது, நம்முடைய புஸ்தகத்திற்கும், இங்லீஷ் காரர் கண்டுபிடித்த சாஸ்திரத்திற்கும் எவ்வள வோ வித்தியாசமிருப்பதாக நீங்கள் சொன்னது போல உபாத்தியாயரும் சொன்னார்.

தாய்—இன்னும் என்ன சொன்னார்?

மகன்—நம்மார்க்கங்களில் சொல்லப்பட்ட பூகோள ககோள சாஸ்திர விஷயங்கள் சுத்தப்பொய் யென்றும், கட்டுப்பாடாய் எழுதினார்களென் றும் அதை நம்பக்கூடாதென்றும் இங்லீஷ்காரர் கள் நன்றாயும் அனுபவமாயும் பிரத்யக்ஷமாய்க் கண்டுபிடித்த பூகோள ககோள விஷயங்களை நமக்குத் தெரியும் பொருட்டு எழுதிக் கொடுத் தார்களென்றும் இதுவே உண்மை யென்றும் சொன்னார்.

தாய்—இதன் விபரத்தையும் கூடியவரையிலும் உன க்குச் சொல்லுகிறேன் கேள். நம்முன்னோர்கள்

எழுதிய பூகோள ககோள் விஷயங்கள் தான் உண்மையென்று நீ தெரிந்துகொள்ளவேண்டும், நம்மவர்கள், மெய்ஞ்ஞானத்தினுல் உண்மைகளை எழுதினுர்கள். அவர்கள் அனுபவஞானத்தைக் கொண்டு எழுதி யிருப்பார்கள். இதுவே வித்தியாசம்.

மகன்—அவர்கள் ஒவ்வொரு விஷயத்தையும் நன்ருய் எடுத்துக்காட்டி யிருக்கிறுர்களே, நம்முடைய புஸ்தகத்தில் அவ்வளவு ஆதாரத்துடன் எழுதி யிருக்கிறதா ?

தாய்—என்ன ஆதாரம் சொல்லுகிறுர்கள்?

மகன்—சூரியன் இருந்த இடத்திலேயே இருக்கிற தென்றும், பூமி சுற்றுகிறதென்றும் இன்னும், இதைப்போலபல ஆதாரம் எடுத்துக் காட்டி யிருக்கிறுர்கள்.

தாய்—நம்முடைய புஸ்தகத்திலும் வழக்கமான சில சொற்களைக்கொண்டு நாமும் ஆதாரமாய் வைத்துக் கொள்ளலாம். என்ன வென்ருல் சூரிய உதயமென்றும் சூரியஅஸ்தமனமென்றும் சொல்லுவது ஒரு ஆதாரம். மேலும் சூரியனுக்கு ஒரு இரதம் இருக்கிறதாகவும் அதில் பச்சை குதிரைகள் பூட்டி அருணன் என்னும் பெயரை யுடைய ஒருவன் சாரத்தியம் செய்வதாகச்சொல்லப்படுகிறது.

மகன்—இந்த ஆதாரம் போதுமானதல்ல. இன்னும் என் புத்தியில் படும்படி சரியாய்ச் சொல்லவேண்டும்.

தாய்—எப்பொழுதும் நமக்குத் தெரியாத விடயங்களை பிறருக்குத் தெரியமாட்டாதென்று நாம் நினைக்கக்கூடாது. நம்முன்னோர்களாகிய மகான்கள் கடவுளின் தயையினால் அஷ்டமாசித்திகளும் பெற்று அண்டங்களை யெல்லாம் பார்த்து வந்து அதற்குள்ளடங்கிய மண்டலங்களை யெல்லாம் தனித்தனி பிறித்து நமக்கு விளங்கும்படி எழுதி யிருக்கிறார்கள் இதுவே உண்மை. மேலும் மேல்நாட்டார் முதலில் பூகோள விஷயம் கணடுபிடித்து இன்னவிதம் இருக்கிறதென்று அரசாங்கத்தாருக்குத் தெரிவித்தார் அந்தவிதப்படி அச்சிட்டு அக்காலத்திலுள்ளபள்ளிக்கூடப் பையன்களுக்குப் பாடமாக வைத்தார்கள் பிற்பாடு இரனூறு மூன்னூறு வருடத்திற்கு பின் மேனாட்டிலே மற்றொருவர் தோன்றி அனுபவ ஞானத்தில் இன்னுஞ் சில விஷயங்களைக் கண்டு பிடித்து நிச்சயித்தார். அரசாக்ஷியார் இரண்டாவதவர் சொன்ன பூகோள விஷயத்தையே மறுபடி எடுத்துக் கொண்டார்கள். இன்னும் மேனாட்டில் மற்றொருவர் தோன்றி இன்னும்வேறுவிஷயங்களைக் கண்டுபிடித்து இதையும் ரத்து செய்யக்கூடும். நம்முடைய பூகோள ககோள விஷயங்கள் அப்படி மற்றொருவரால் உண்மை

யாக இரத்துசெய்ய முடியாது என்பதை நீ அறியவேண்டும்.

மகன்—நம்முடைய நாட்டு பூகோள ககோள விஷயமும் ஜோசியமும் எனக்கு நம்பமுடியவில்லை நான் நம்பும்படி இன்னும் சில விஷயங்கள் எடுத்துக்காட்டவேண்டும்.

தாய்—சரி. அப்படியே செய்கிறேன் சூரிய சந்திர கிரகணம் என்பது இன்னதென்று உனக்குத் தெரியும். இதைக்குறித்தே நான் உனக்கு விளக்கிச் சொல்லுகிறேன். தற்காலத்தில் நம் தேசத்தில் பஞ்சாங்கம் கணித்து அச்சப்போடக் கூடியவர்கள் சோதிட சாஸ்திரமும் கணித நூலும் நன்றாய்க்கற்றுணர்ந்தவர்கள் இதில் சமூசயமில்லை. அவர்கள் அந்தப் பஞ்சாங்கத்தில் இத்தனுவது வருடம் இந்த மாதம் இந்தத் தேதியில் இவ்வளவு மணி நேரத்தில் கிரகணம் பிடிக்கப்போகிறதென்றும் இத்தனை நாளிகைக்கு விடுகிறதென்றும் ஒரு வருடத்திற்கு முன்னமேயே கணித்து பஞ்சாங்கத்தில் எழுதியிருக்கிறார்கள் அப்படியே ஒரு நிமிஷம் கூட ஏற்றத் தாழ்ச்சியின்றி சம்பவிக்கிறதும் நமக்குத் தெரிந்த விஷயம். மேலும் பஞ்சாங்கம் கணிக்கக் கூடியவர்கள் இங்கிலீஷ் பாஷை படித்தவர்களல்ல. கப்பலேறி தேசசஞ்சாரம் செய்தவர்களுமல்ல. தூர திருஷ்டிக்கண்ணுடி முதலிய

கருவிகளும் வைத்திருப்பவர்களுமல்ல. இப்படியிருக்க இவர்கள் சொன்ன வாக்கியங்கள் சரியாயிருப்பதற்குக் காரணம் என்ன ? இப்படி இவர்கள் சொல்லுவாக்கியம் சரியாயிருப்பதற்கு மேற்கூறிய மகான்கள் எழுதிய கணித நூல்களே சாக்ஷியாகவிருக்கிறது. மேலும் கிரகங்களெல்லாம் மகாமேருவைச் சுற்றி வருகிறதாகவும் கிரகங்களினுடைய சாரங்களும் விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் சூரிய சந்திரர்கள் உதயாஸ்த்தமனம் செய்வது வாஸ்த்தவம் தான். ஆகையால் மகான்கள் எழுதின நூல் பொய்யல்லவென்று நீ நன்ருய்த் தெரிந்துகொள்.

மகன்—நான் இங்கிலீஷ் பூகோளம் படிக்கவேண்டியதில்லையா ?

தாய்-அவசியமில்லையென்று யார்சொன்னுர்கள் அதைப்படித்தால் தான் யுனிவர்சிடி பட்டங்கள் பெறலாம் அதற்காக நம்முடைய பூகோளம் பொய்யென்று சொல்லாதே படிக்காமலுமிராதே இனிமேல் இதைக்குறித்து பேசினல் அதிகம் வளரும். ஆகையினல் இத்துடன் நிறுத்திவிடுவோம். ஆத்மஞானம் விர்த்தியடைய நம்தேசத்து கிரந்தங்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டிருக்கிறது ஆகையினல் நம்தேச கிரந்தங்களை நீ அடிக்கடி படிக்கவேண்டும்.

மகன்—சரி மனிதர்கள் முதலில் எப்படி உண்டானார்கள் ?

தாய்—பிரம்மதேவர் உலகமெல்லாம் சிருஷ்டித்துபின் மனோசங்கர்ப்பத்தினாற் பிரஜாபதிகளை யுண்டாக்கினார். பிரஜாபதியின் மூலமாய் பிரஜைகளுண்டானார்கள்.

மகன்—அம்மா அதனுடைய விபரமும் எனக்குச் சொல்லவேண்டும். பிரஜாபதியென்றால் என்ன?

தாய்—பிரஜாபதி என்றால் பிரஜைகளுக்கு அதிபதி என்று அர்த்தம் மேலும் மனுப்பிரஜாபதியினால் மனிதர்கள் உண்டானார்கள். அதினால் தான் நமக்கு மனிதர்கள் என்றும், மானிடர்கள் என்றும், மனுமக்கள் என்றும் பெயர் வந்தது.

மகன்—இந்த சிருஷ்டிப்பு எனக்கு நன்றாய் விளங்கவில்லை அனுபவத்தைக்கொண்டு எனக்கு நன்றாய் விளங்கும்படி சொல்லவேண்டும்.

தாய்—சிருஷ்டி, திதி, பிரளயம் இஃதெல்லாம் கடவுளாலேயே உண்டாகிறதென்று முன் சொன்னேனல்லவா. அதையே திருஷ்டாந்த பூர்வமாக உனக்குச் சொல்லுகிறேன் சிருஷ்டியில் நான்கு விதமுண்டு. எப்படியெனில் க்ஷணசிருஷ்டி க்ஷணப்பிரளயம் தினசிருஷ்டி தினப்பிரளயம் தேக சிருஷ்டி ஜீவப்பிரளயம் பிரம்ம சிருஷ்டி பிரம்மப்பிரளயம் என்று நான்கு விதம் நம்முன்

ஞோர்கள் விளக்கியிருக்கிறார்கள். இதன் விபரம் என்னவென்றால் க்ஷணசிருஷ்டி க்ஷணப்பிரளயம் என்றால் நினைத்தலும் மறத்தலும் தினசிருஷ்டி தினப்பிரளயம் என்றால் காலையிலிருந்து மாலை வரைக்கும் உலகவியவகாரத்திற்குச் சாதகமான வேலைகளைச் செய்துகொண்டே வருகிறோம். பிற்பாடு உலக சிந்தனை இன்னவிதம் என்று தெரியாமல் நித்திரை செய்கிறோம் உலகவியவகாரம் முழுவதும் மனத்திலடங்கிமனம்காரண சரீரத்திலடங்கியவுடனே நாம் நித்திரை செய்கிறோம் இதற்குத்தான் தினசிருஷ்டி தினப்பிரளயம் என்று சொல்லப் படுகிறது தேகசிருஷ்டி ஜிவப்பிரளயம் என்றால் ஜனனமும் மரணமும். இவற்றைப்போலவே பிரம்ம சிருஷ்டி பிரம்மப்பிரளயம் என்று சொல்வது. அதாவது உலகத்தை யுண்டாக்கும் பொழுது சிருஷ்டி என்று சொல்லப்படும். உலகமெல்லாம் மாயையிலடங்கியிருக்கும் பொழுது பிரளயம் என்று தெரிந்துகொள்ளவேண்டியது.

மகன்—சிருஷ்டிப பின் விஷயம் கொஞ்சம் தெரிந்துகொண்டேன். வேதம் என்று சொல்லுகிறார்களே. அதன் விபரமென்ன?

தாய்—வேதம் என்றால் தெய்வவாக்கு.

மகன்—தெய்வவாக்கென்றால் எனக்கொன்றும் தெரியவில்லையே.

தாய்—தெரியும்படியாய்ச் சொல்லுகிறேன். மேற் சொன்ன பிரம்மதேவர் உலகத்தை யுண்டாக்கிய வுடனே பிரஜாபதிகளை யுண்டாக்கி நீங்களெல் லாம் இன்னின்னபடி நடபடிக்கை நடத்தவேண் டுமென்றும் விபரமாய் கட்டளையிட்டார். அந் தக் கட்டளை வாக்கியம் வேதவாக்கியம் என்று சொல்லப்படுகிறது,

மகன்—கிறீஸ்தவர்களல்லவா வேதமென்று ஒரு புஸ் தகத்தை வைத்துக்கொண்டு நமக்கு அடிக்கடி உபதேசம் செய்யவருகிறார்கள் அந்த வேதமா நீங்கள் சொல்லுவது.

தாய்—இல்லை. அதல்ல நான் சொல்லுவது. நம முடைய வேதம் வேறே. அவர்களுடைய வே தம் வேறே. ஆனால் அவர்களும் கடவுள் கொடு த்த வேதமென்று சொல்லுவாகர்கள். இதற்கு மதற்கும் வெகு வித்தியாசமிருக்கும். சில விஷ யம் சம்பந்தப்பட்டிருக்கும்.

மகன்—நம்முடைய வேதத்தில் என்ன சொல்லுகி றது. அதைக்கொஞ்சம் எனக்கு சொல்லுங்கள்.

தாய்—சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். அதா வது கர்மகாண்டம், பக்திகாண்டம், ஞானகாண் டம் இவைகளை நன்றாய்ப்பிரித்து எழுதப்பட் டிருக்கிறது. கர்மத்தில் தின நடவடிக்கை தே வகாரியம் பிதிர்காரியம் பிராயச்சித்தாதிகள்முத

லியவை சொல்லப்பட்டிருக்கிறது பக்தியில் பக வானைப் பணிந்து நேசித்து பூசித்து விஸ்வாசித் திருக்குப்படி சொல்லுகிறது. ஞானத்தில் கட வுள் சொரூபத்திலிருந்து நாம் வந்தபடியால் கடவுளுக்கும் நமக்குள்ள பேதா பேதத்தைக் குறித்து சொல்லப்படுகிறது.

மகன்—அம்மா பக்தியென்றால் என்ன?

தாய்—பக்தியென்றால் மேலே சொன்ன விஷயப்படி பகவானுக்கு அடிமை பூண்டு அவர்க்கு விரோத மான வேலைகளைச் செய்யாமல் அவரது சட்டத் திற்கு உட்பட்டு அவருக்குப் பிரியமான வேலை களைச் செய்துகொண்டு வருகிற விபரம் பக்தி என்று சொல்லப்படும். இப்படிச் செய்துகொ ண்டே வந்தால் இம்மையிலும் நன்மையடைந்து மறுமையிலும் மோக்ஷமடையத் தகுதியுடைய வர்களாவார்கள். மேலும் மனோவாக்குக் காயங் களினால் குற்றங்கள் செய்யாமலும் ஜாதிக்குத் தகுந்தபடி வேதத்தில் விதித்த நற்கருமங்களைக் கூடுமரனவரைக்கும் பணச்செலவு செய்து, செய் துகொண்டே வரவேண்டும். எப்பொழுதும் பிறருக்கு இடைஞ்சலில்லாமலே வாழவேண்டும் அடிக்கடி பகவானை நினைத்து வணங்கவேண்டும். ஞானத்தில் மனம் பக்குவப்பட்டவர்கள், கட வுள் சொரூபத்தை மனத்தினால் பற்றிக்கொண்டு பாக்கி விஷயமெல்லாம் அநித்யமாதலால் எல்லா

வற்றையும் வெறுத்து விடும்படி சொல்லியிருப்பது ஞான காண்டம்.

மகன்—கடவுளை நினைத்து எப்படி எல்லாவற்றையும் வெறுக்கக்கூடும்?

தாய்—எல்லாவற்றையும் வெறுக்கமுடியாதவன் கருமங்களையேசெய்து படிப்படியாய் உயரவேண்டும். பிறகு பக்தி, பகவானிடத்தில் செய்து கொண்டு வந்தால், பகவான் பரிசுத்தமான ஞானத்தைத் தந்தருளுவார். அதினால் மோக்ஷமடையலாம். நீ முக்யமாய்த் தெரிந்துகொள்ள வேண்டியதென்னவென்றால், எவன் எதற்குத் தகுந்தவனோ, அவன் அதையே செய்யவேண்டும். அப்படியே, அநேகமாய் நடந்துகொண்டு வருகிறது. ஆனாலும் நம்நாட்டில் அந்நியமதமும், அந்நியபாஷையும் பிரவேசித்தபின்பு, சாஸ்திர யுக்தமான கருமங்களை, சிலர் விட்டுவிட்டார்கள் சிலர் செய்துகொண்டும் வருகிறார்கள். இதற்காகவே அநேக மகான்கள் லோகோபகார நிமித்யம் அனுபவ ஞானத்தைக்கொண்டு சன்மார்க்க நூல்கள் இயற்றியிருக்கிறார்கள். அதில் முக்யமான விஷயமொன்று சொல்லுகிறேன். எப்பொழுதும் நம்முடைய மனம் மாயாகாரிய மோகத்தினால் கெடுதலான வேலைகளை செய்ய முயற்சிக்கும். நாம் அடிக்கடி அதைத்தடுத்து, நற்காரியஞ் செய்யும்படி தூண்டவேண்டும். அப்

படிச் செய்தால் கஷ்டத்திற்குத் தகுந்தபலா மடையலாம். நாம் ஞானத்திற்காக சிரமப்பட்டால், வேலைக்குத் தகுந்தபடி கூலி கிடைக்கவேண்டியது நியாயந்தானே. அப்படியிருக்க, கருமங்கள் செய்யாமல் எப்படியிருக்கமுடியும்? முடியாது, ஆகையினால் ஞானத்திற்குச் சாதகமான, நற்கருமங்களை அடிக்கடி சிரத்தையாக செய்துகொண்டுவந்தால், ஞானம் நாளுக்குநாள் விருத்தியாகும் என்று நம்பு நீ சாவகாசமிருக்கும்பொழுதெல்லாம் நம்மத கிரந்தங்களைப்படித்து, சங்கதிகளைத் தெரிந்துகொள்.

மகன்—சரி, அப்படியே செய்கிறேன், சாஸ்திரம் என்கிறார்களே, அதன் விவரமென்ன? வேத வாக்கியம் போராதா?

தாய்—சாஸ்திரமென்றால் வேதத்தை அனுசரித்தே நன்றாயும் விஸ்தாரமாயும், நீதி வாக்கியங்கள் நமக்கு விளங்கும்பொருட்டு அக்காலத்திலுள்ள அரசர்களும் மகான்களும் எழுதினார்கள். அது அரசாங்கத்தில் சட்டம்போல, இப்பொழுதும் அழியாமல்யிருக்கிறது. அதன் படி நடவாதவர்களை தண்டிக்கவும், அதன் படி நடந்தவர்களுக்கு தகுந்த சம்மானம் கொடுக்கவும். அக்காலத்தரசனுக்கு அதிகாரம் உண்டு அதினால், ஜனங்கள், அரசனுக்குப் பயந்துக் கொண்டு சீர்திருந்தஇடமுண்டாயிருந்தது இக்காலத்திலும்,

அரசன் செய்தசட்டப்படி நடவாதவர்களுக்கு தண்டனையுண்டு, என்பதை நீ ஞாபகத்தில்வைக்கவேண்டும்.

மகன்—புராணமென்றால் என்ன? அதைக்குறித்தும் எனக்குச்சொல்லவேண்டும்.

தாய்—புராணத்தில் பலவிதமுண்டு அதில் அடங்கிய விபரமென்னவென்றால், க்ஷேத்திரமகிமையும், தீர்த்தமகிமையும், இதற்குமுன் நடந்திருக்கிற சரித்திர விஷயங்களும் பகவான் யுகந்தோரும் அவதரித்த அவதாரமகிமையும், கொடுங்கோலரசன் சரித்திரமும். செங்கோலரசன் சரித்திரமும், பிரபஞ்சம் உண்டான விபரமும், ஒடுங்கும் விபரமும், தத்துவ ஞானரகசியங்களும், தத்துவஞானம் பெற்றவர்களின் சரித்திரமும், பகவானுக்கு தொண்டு, பூண்டவர்களின் சரித்திரமும்,இன்னும் பூகோள ககோள விஷயங்களும், தவசிகள் அகங்காரத்தினால்சாப மடைந்ததும், பின் விமோசன மடைந்ததும், தவசிகள் அஷ்டமாசித்திபெற்று, ஈரேழுபதினாலுபுவனங்களும் சுற்றி வந்ததும், இன்னும் இதைச்சார்ந்தபல விஷயங்களும், குருவினிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள்ளும் விதமும், குரு சாபமடைந்த வர்களின் சரித்திரமும் தாய்தந்தையிடத்தில் சாபமடைந்தவர்களின் சரித்திரமும், பிறகு அதற்குப் பரிகாரம் தேடிக்கொண்ட

விதமும் அநியாயம் செய்தவர்கள் பட்டபாட்டையும் கெட்டசேட்டையும், இன்னும் ராஜாங்கத்துக்கு வேண்டியயுக்தியும் உபாயமும், யுத்தம் செய்ய வேண்டியமுறைகளையும், நாம் தெரிந்து கொண்டு சீர்திருத்தமாயிருக்கும் பொருட்டு நம் முன்னோர்களாகிய மகான்கள் அப்போதுக் கப்போது, எழுதி புராண மென்று பெயரிட்டார்கள். நீ அதைபடித்தால் உனக்கே நன்ருய் விளங்கும்.

மகன்—அம்மா! இத்தனை பெரிய புஸ்தகம் படிக்க வெகு நாள் செல்லுமே!

தாய்—வெகுநாள் செல்லட்டுமே, நாளொன்றுக்கு 1-மணிநேரம் அல்லது 2-மணிநேரம்படித்துகொண்டே வந்தால் சங்கதிகளெல்லாம் விளங்கும்.

மகன்—அம்மா! இத்தனை நாளும், கட்டுப்பாடான பொய் சரித்திரமென்றே எண்ணியிருந்தேன் இப்பொழுது இதெல்லாம் உண்மை என்றுதெரிந்து கொண்டேன். மேலும் புராணம்படித்தால் புண்யமென்று சொல்லுகிறுர்களே! அது என்.?

தாய்— அப்படிப் புண்ணியமென்று சொன்னதின் காரணம், புராணம படித்தால் மனோவியாபாரம் விருத்தியாகி புத்தி விசாலமாகுமென்பதற்குச் சந்தேகமில்லை. அதனல் புண்ணியமென்று சொல்லுகிறுர்கள்.

மகன்—மதகிரந்தங்கள் இவ்வளவுதானா? இன்னும் எதாவது இருக்கிறதா? இருந்தால் அதையும் சொல்லவேண்டும்,

தாய்—இதுவரைக்கும், வேதம் சாஸ்திரம், புராணம் என்று மூன்று விதஞ்சென்னேன். இன்னும் நாடகாலங்காரம், காவியம் என்ற புஸ்தகங்களும் உண்டு.

மகன்—அதெல்லாம்என்னத்திற்கு எழுதினார்கள்.

தாய்—இதன் விபரமுஞ் சொல்லுகிறேன் கேள் வேதம் தெய்வவாக்கென்று சொன்னேனல்லவா? சாஸ்திரம் அரசன் வாக்கியமென்றும், புராணம் தாய்தந்தைகளுடைவாக்கியமென்றும், நாடகாலங்காரம் மனைவிவாக்கிய மென்றும் நீ தெரிந்து கொள்ளவேண்டும்.

மகன்—அம்மா! இப்படிச் சொன்னால் எனக்கு விளங்கவில்லையே! நன்றாய்ச் சொல்லவேண்டும்

தாய்—உனக்கு விளங்கும்படி, வெளிப்படையாகத் தெரிவிக்கிறேன். வேதத்தில் சொன்னபடி செய்யாதவனுக்கு தண்டனை வெகு நாள் கழித்து உண்டாகும். அப்படி நாள் கழித்து உண்டாவதினால் ஜனங்களுக்கு சீர்திருந்தவேண்டு மென்கிற அக்கரை இல்லாததினால் அரசன் முதலியவர்கள் மனிதர்மேல் இரக்கத்தினால், சாஸ்திரசட்டங்கள் எழுதி அப்படி நடவாதவர்களுக்கு தண்ட

ளை ஏற்படுத்தினல் சீர்த்திருந்துவார்களென்று நினைத்தார்கள். அப்படியும் சில மூடஜனங்கள் திருந்தவில்லை. பிற்பாடு தாய்தந்தையர்கள் புத்தி சொல்வதுபோல, கிரமப்படி நடந்தவன்சுகமடைந்த விதமும், அக்கிரமுஞ் செய்தவன் கெட்டு போன விதமும், நமக்குத்தெரியும் படி புராண ரூபமாய் எழுதினர்கள். அப்படியும் சில மூடமக்கள் திருந்தினபாடில்லை. பிற்பாடு வித்வான்கள் இனிஎன்ன செய்வதென்று யோசித்து மனைவிவாக்கியம் போல நவரசம் பொருந்திய நாடகாலங்காரத்தோடு சில நற்குணங்களையும் சேர்த்து எழுதினர்கள்.

மகன்—அம்மா! இப்பொழுது விபரம் தெரிந்துகொண்டேன் அப்படியாவது ஜனங்கள் திருந்தினர்களா?

தாய்—எப்பொழுதும் எக்காலத்திலும் உண்மையுள்ளவர்கள் இகலோகத்தில் சுகப்பட்டு பரத்தில் மோக்ஷமடைந்தார்கள்! உண்மையில்லாதவர்கள் பாவத்தினல் கஷ்டப்பட்டு நரகமடைந்தார்கள் இப்படியிருந்தாலும் சிருஷ்டிகாலம் தொடங்கி அநேகமாய் ஜனங்கள் சீர்திருத்தமடைந்துகொண்டே வந்தார்கள். இன்னும் தற்காலத்திலும் கற்றறிந்த பெரியோர்கள் ஜனங்களை திருத்தவேண்டுமென்று கங்கணங்கட்டிக்கொண்டிருக்கிறர்களென்பது தெரிந்த விஷயமே.

மகன்—தற்காலத்தில் கற்றோர்கள் என்ன முயற்சிசெய்கிறார்கள்.

தாய்—கற்றறிந்தவர்கள் அநேக விஷயங்களை ஜனக்கூட்டத்தில் பிரசங்கம் செய்கிறார்கள். சாஸ்திர விஷயங்களையும் உபந்நியாசம் செய்கிறார்கள் அதினாலும் ஜனங்கள் திருத்தமடைந்துகொண்டேவருகிறார்கள்.

மகன்—அம்மா! தாங்கள் மேலே சொன்ன கிரந்த புஸ்தகங்கள் கொஞ்சமாக இருக்கின்றனவே! நான் ஒருநாள் புஸ்தகஜாப்தாவைப் படித்துப் பார்த்தேன். அதில் அளவற்ற புஸ்தகங்கள் இருக்கிறதாகத் தெரிந்துகொண்டேன். அதன் விபரமென்ன?

தாய்—அதையும் சொல்லுகிறேன்கேள். தயிர்கடைந்து வெண்ணெய் எடுப்பதுபோலாம் நம்தேசத்துமகான்கள் வேதத்தின்சாரமெல்லாம்திரட்டி புஸ்தகமாக எழுதினதற்கு உபநிஷத் என்றுபெயரிட்டார்கள். இந்த உபநிஷத்தில் ஆயிரத்தெட்டு விதங்களுண்டு. அதை விபரித்துச்சொல்ல இப்போது முடியாது. ஞானமே அதில் முக்கியமாய் சொல்லப்பட்டிருக்கிறது. அது நம்மைப் போல சாதாரணமானஜனங்களுக்கு அதிகமாய் விளங்கமாட்டாது. இன்னும் நாலுவேதங்களுக்கும் உபவேதங்கள் நான்கு இருக்கின்றன.

மகன்—அம்மா! உபவேத மென்றீர்கள். அதன் விபரமென்ன?

தாய்—ஆயுர்வேதம், தனுர்வேதம், அர்த்தவேதம், கா ந்தர்வவேதம் என நான்கு இருக்கின்றன. இன் னும் யோகசாஸ்திரம், பாகசாஸ்திரம், சங்கீத சாஸ்திரம், தர்க்கசாஸ்திரம், வியாகரணம் இவைப்போன்ற அநேக கிரந்தங்கள் நம்மகான் கள், அநுபவ ஞானத்தைக்கொண்டும், மெய்ஞ் ஞானத்தைக்கொண்டும் சுருதிசம்மதமாக எழுதி னார்கள். இன்னும் வடமொழிப்புலவராகிய கா ளிதாசன், தண்டி, பவபூதி இப்பேற்பட்டவர் கள், அநேகநாடகாலங்காரம் செய்திருக்கிறார் கள். இன்னும் திராவிடபாஷையில் அநேகவித மான பாடல்களை செய்திருக்கிறார்கள். கம்பர், காளமேகர், அப்பர், சுந்திரர், மாணிக்கவாசகர், தாயுமானவர், பட்டினத்துபபிள்ளையார் இவர்க ளெல்லாம்எழுதி அச்சிட்டபுஸ்தகங்கள் அநேக மிருக்கின்றன. மேலும் மேனாட்டார் எழுதிய நாடகாலங்காரம், நாவல்கள், பாடல்கள் இவற் றையெல்லாம் நம் தேசபாஷையில் மொழிபெய ர்த்திருக்கிறார்கள். இன்னும் அந்தந்ததேசங்க ளில் நடந்த தேச சரித்திரங்களும் எழுதப்பட் டிருக்கிறது தற்காலத்தில், தினப்பத்திரிகை, மாதப்பத்திரிகை, வருஷப்பத்திரிகை, வாரப்பத் திரிகை இவைபோன்றபத்திரிகைகள் தேசமுழு வதும் உலாவித்திரிகின்றன. இந்தப் புஸ்தகங்க ளின் பெயர்களெல்லாம், புஸ்தகஜாப்தாவி லிரு க்கிறது. இது ஒருபெரிதல்ல. ஒவ்வொருவீட் டிலும், மேஜையிலும், பீரோவிலும், அலமாரியி

னும் அடுக்கியிருப்பதை நாம் நேரிலேயே பார்த் திருக்கிறோம். இப்படி உலகம் முழுவதும், புஸ் தகமயமாகவே இருக்கிறது.

மகன்—அம்மா! இத்தனை புஸ்தகங்கள் எதற்காக எழுதியிருக்கிறது?

தாய்—கிரந்த கர்த்தாக்களின் கருத்து என்னவென் றால் எவ்விதமாகவாவது ஜனங்கள்மனம் லயப்ப ட்டு சந்தோஷமடையவேண்டுமென்பதே.

மகன்—மனம் லயப்பட்டு சந்தோஷப்படுவது என் றால் எனக்கு விளங்கவில்லையே.

தாய்—ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன் கேள். நாம் நல்ல சங்கீதம் கேட்கும்பொழுது நமக்குச் சந்தோஷமா யிருக்கிறதல்லவா? அந்த சந்தோ ஷம் சங்கீதத்தில் இருக்கிறதாக நாம் நினைப் போம். உண்மையில் அப்படியல்ல. பின் எப் படியென்றால், சந்தோஷம் நமக்குள்ளேயே யிரு க்கிறது. அதன் விபரமும் சொல்லுகிறேன். சத் துசித்தானந்தம் சொரூபமாய் எங்கும் வியாபக மாய் இருக்கும் கடவுள்தேஜஸ் நமக்குள்ளிருக் கிறபடியால் மனம் முதலிய அந்தக்கரணங்கள் அசையாமலிருக்கும்பொழுது அந்த சொரூபம் தோன்றும். இந்த சூட்சுமத்தை நன்றாயறிந்த மகாத்மாக்கள் மனதைநிறுத்தி ஆத்மசொரூபத் தில் லயப்பட்டு எப்பொழுதும் சந்தோஷமாக வே யிருப்பார்கள். சாதாரணமான நமக்கெல் லாம் அப்படி மனதை நிறுத்த சக்தியில்லாதகி

ஞல் வேறேவிதமாக சந்தோஷமனுபவிக்கிறோம். இப்படி அனுபவிக்கிறதெல்லாம் மனம்நிறுத்து வதற்கு அப்பியாசமென்று நாம்தெரிந்து கொள்ளவேண்டும்.

மகன்—அம்மா! எனக்கு இன்னும் இந்தவிஷயம் புத்தியில் நன்ருய்ப்படவில்லை. விளங்கும்படிசொல்ல வேண்டும்.

தாய்—இன்னும் விபரமாகச் சொல்லுகிறேன் கேள். உனக்கு நல்ல உடுப்புகள் அணியும்பொருட்டு

ஆசையுண்டாஞல் என்னிடம் தெரிவித்து அந்த உடுப்புகளைப் பெற்றுக்கொள்ளுகிருய். பெற்றுக்கொண்ட அந்த உடுப்பை நீ உடுத்திக்கொண்ட உடனே உனக்கு சந்தோஷமாயிருக்கும். அந்த சந்தோஷம் உடுப்பிலிருப்பதாக நினைப்பாய்.

மகன்—ஆமம்மா! அப்படித்தான் நினைத்திருந்தேன்.

தாய—மேலும் உனக்கு ஒரு வைரமோதிரம் வேண்டுமென்று ஆசைப்பட்டு அது கிடைத்தவுடனே நீ சந்தேஷப்படுவதும் சுபாவம். இதைப்போலவே நீ அபேட்சிக்கும் பொருளெல்லாம் கிடைத்தவுடன் சந்தோஷமாய் இருக்கும். உண்மையில் அந்தப்பொருளில் சந்தேஷமிருந்தால் பழமையாய்ப்போன உடுப்பிலுங் கூட சந்தோஷமிருக்கவேண்டும். உண்மையில் பழைய உடுப்பின் பேரில் உனக்குச் சந்தோஷமில்லை. இன்னும் மோதிரவிஷயமும் 10 நாள் போட்டுக்கொண்டால் கிடைத்தவுடனே இருந்த சந்தோஷமிருக்கமாட்டாது, இப்படியே உலகத்திலுள்ள ஜடப்பொருள்களில் சந்தோஷமில்லையென்று மகான்கள் நன்ருயறிந்திருப்பார்கள்.

மகன்—அம்மா! இதற்குக்காரணமென்ன?

தாய்—நாம் அபேட்சித்தபதார்த்தம் கிடைத்தவுடன் மன முதலிய அந்தக்கரணங்கள் ஒருமைப்பட்டு ஒன்றையும் சிந்திக்காமலிருக்கும். அப்பொழுது சூரியபிம்பம் அசையாமலிருக்கிற ஜலத்தில் பிரதிபிம்பிக்கிறது போல, கடவுள் தேஜஸ் நமது அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்கும். அப்பொழுது நமக்குச் சந்தோஷமுண்டாகிறது. பிற்பாடு மனம் இதரசிந்தனைகளில் வியவகாரம் செய்வதால் தேஜஸ்மறைந்துபோகும். இப்படிக்கிருக்கிறதை புத்திமான்கள் நன்றாயறிந்திருப்பார்கள். நமக்கு இந்த விதம் தெரியாததினால் விஷயசுகங்களில் பிரவர்த்திக்கிறோம். அதனால் தான் நாடகங்கள் நடத்தி, சங்கீதக் கச்சேரிவைத்து சதுர்க்கச்சேரிகள் வைத்து ஜனங்கள் சந்தோஷப்படும்படியாய் பிரவர்த்திக்கிறார்கள், இப்படிப்பலவிதமான சந்தோஷங்களடைந்து அழிவில்லாத ஆனந்தமடையும் பொருட்டு, முடிவில் ஆத்மசொரூபத்தில் லயப்படுவார்கள் என்று மகான்கள் சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுது முக்கியமாய் நீ தெரிந்துகொள்ள வேண்டியதென்னவென்றால் உலகத்திலுள்ள ஜடப்பொருள்களில் ஆனந்தமில்லை யென்றும் நமக்குள் சித்சொரூபமாயிருக்கிறதென்றும், அதை யறிந்துயடையும் பொருட்டு அநேக பெரியோர்கள், அநேக மதங்களில், அநேகவிதமாய் அநேகபாஷையில், அந்தந்ததெய்வம்போலாக வேண்டுமென்று எழுதியிருக்கிறார்கள். இவ்வளவுதான் இதனுடைய உண்மை இன்னும் உனக்கு நன்றாய்த்தெரியவேண்டுமானால் பலகிரந்தங்களைப்படித்துத் தெரிந்துகொள்ளவேண்டும், அப்படிப் படிக்கும் பொழுது பலமதாசாரியர் கருத்து

ஒரே மாதிரியாகயிருந்தபோதிலும், இகபரத்தில் சுகமடைய இந்த மார்க்கமே மேலென்றும் இதிலேயே சரியான விஷயங்கள் அமைக்கப்பட்டிருக்கிறதென்றும் உனக்கே சந்தேகமற விளங்கும்.

மகன்—அம்மா! தாங்கள் சொன்னவிஷயம் சரியாய் இருக்குமென்று என் புத்தியில் விபரிக்கப் படாத விஷயங்களை பலகிரந்தங்கள் படித்து தெரிந்து கொள்ளுகிறேன். ஆனாலும், அந்நிய மதக்காரர்கள் நம்முடைய மதத்தைத் தூஷித்து சிற்சில புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார்கள். அதைப்படித்தால் அதிலுள்ள விஷயம், சரியாயிருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது. அந்நிய மதவிஷய வியரமும் உங்களைக்கேட்டு தெரிந்துகொள்ளவேண்டு மென்று நினைத்திருக்கிறேன்.

தாய்—நானும் அப்படிபட்ட சில புஸ்தகத்தைப்படித்திருக்கிறேன். அதைகுறித்து பின் ஒரு நாள் சாவகச மிருக்கும்பொழுது விபரமாய் கூடிய மட்டும்உனக்குத்தெரி விக்கிறேன் இப்பொழுது அதிகநேரமானதினால் சாப்பிடப் போகவேண்டும். மேலும் நீ பாடம் படிக்கவேண்டும், இன்றைக்குச் சென்னவிஷயங்களை மறந்து விடாமல் ஞாபகத்தில் வைத்துக்கொள்.

மகன்—சரி அம்மா அப்படியே செய்கிறேன், நாம் சாப்பிடப்போவோம் வாருங்கள்.

# அந்நியமதம்,

## 2-வது, அத்தியாயம்.

மகன்—அம்மா இப்பொழுது தாங்கள் சாவகாசமாய் உட்கார்ந்துஇருப்பதால் எனக்கு மற்ற விஷயமும் சொல்லவேண்டும்.

தாய்—ஆம்இப்பொழுது. மற்றவிஷயங்கள் உனக்கு தெரியபடுத்துகிறேன். எதைதெரிந்து கொள்ள வேண்டு மென்று நினைத்தாயோ அதைகேள். கூடுமானவரைக்கும் சொல்லுகிறேன்.

மகன்—அம்மா நான் தங்களை அடிக்கடி விஷயங்கள் தெரிவிக்கும்படி தொந்திரவு செய்கிரபடியால் தங்களுக்கு கஷ்டமாயிருக்குமென்று நினைக்கிறேன்.

தாய்—அப்பா எனக்குயாதொரு கஷ்டமும் இல்லை ஏனென்றால் நீ என்னை பலவிஷயங்கள் கேட்டாலும் கேளாவிட்டாலும் நான் உனக்கு போதிக்க கடமைபட்டவ ளென்று உனக்கு தெரியாதா. மேலும் நான் உன்னை வளர்க்கக்கூடியவளென்று உனக்குத்தெரியும். உன்தேகத்திலுள்ள அழுக்கை நீக்கும் பொருட்டு ஸ்நாணம் செய்வித்து சுத்தமான உடுப்பை போட்டு தேகம் வளரும் நிமித்தம் அன்னபாணதிகளூட்டி வளர்ப்பது போல் உன் ஆத்துமா கரையேறும் பொருட்டு

உன் உள்ளத்திலுள்ள அழுக்குநீங்க சன்மார்க்க போதனை செய்து மெய்ஞானசட்டையை நீதரிக்கும்படி பலநல்விஷயங்களைபோதிக்கவும்கடமை பட்டவளென்று நீ அறிந்துகொள். மேலும் சகலவிதத்திலும் உன்னை மேன்மைசெய்ய சகல வித்தையும் கற்பித்து எல்லாரும் கொண்டாடும்படியும் நான்செய்யவேண்டும் அப்படிசெய்தால் எனக்கு சந்தோஷமாயிருக்கும் (சான்றோரென்பது ஈன்றோர்கழகு) என்று மூத்தோர் மொழியிருப்பதால் எவ்விதத்திலும் நீ சகல கலையும் கற்று பண்டிதனுக வேண்டுமென்று நினைத்து பகவானை பிரார்த்திக்கின்றேன். இதுவே எனது கோரிக்கை.

மகன்—அம்மா அப்படியானல் எனக்கும் அதிகசந்தோஷம் தாங்கள் இப்படி நினைத்திருப்பதை நான் அறியாததினுல் அப்படி சொன்னேன் நம் முன்னோர்கள் (தாயிலும் சிறந்தகோவிலுமில்லை, தாய்சொற் றுரந்தால் வாசகமில்லை யென்றும்,) மொழிந்திருப்பதால் நான் தங்களைபக்தியாயும் விசுவாசமாயும் பூசிப்பேன்.

தாய்—அப்பா நீ அப்படி செய்தால் நமது குமாரன் நற்குணமுள்ளவனென்று நான் மேலும் மேலும் சந்தோஷபடுவேன் நீயும் கூடியசீக்கிரம் முன்னுக்குவருவதில் சந்தேகமில்லை இன்றையதினம், எனக்கு இரண்டு மணிநேரம் சாவகாசம் மானபடியால் நீ தெரிந்து கொள்ளும் விஷயம்கேள்.

மகன்—அம்மா நீங்கள் போன வாரத்தில் இந்து மார்க்கவிஷயம் சொன்னதை ஞாபகத்தில் வைத்திருக்கிறேன் இன்றைய தினம், அந்நியமத விஷயம் தெரிந்து கொள்ள வேண்டும் அந்நியமதம் அநேகமிருக்கிற படியால் எல்லாம் செரிந்துகொள்ள வேண்டுமென்று ஆசைபடுகிறேன்.

தாய்—நீ முதலில் எதைதெரிந்து கொள்ள வேண்டுமோ அதைகேள்.

மகன்—பெரும்பாலும் கிறிஸ்தவமதமே எங்கும் பரவியிருப்பதால் அதைகுறித்த விபரம் தெரிய வேண்டும். கிறிஸ்தவமதம் கடவுளாலுண்டாக்கபட்டதா அல்லதுகட்டுபாடாய் மனிதர்கள் எழுதினார்களாவென்று தெரிந்து கொள்ளவேண்டும். மேலும் உலகசிருஷ்டிப்பு நம்மதத்தில் சொன்னபடி இல்லை. அதில் வேறொருவிதமாயிருக்கிறது. எப்படி என்றால் கடவுள்ரூபமில்லாதவரென்றும் அவர் நினைத்த மாத்திரத்தில் ஆகாயத்தையும், பூமியையும் உண்டாக்கி மற்றும் சகலமும் படைத்து மண்ணை எடுத்து, தன்சாயலாய் ஒருபொம்மைசெய்து அதில் ஆவிஊதி ஜீவாத்மா ஆக்கி பூமியில் எல்லாவற்றையும் அனுபவித்துக் கொண்டு சௌக்கியமாயிருவென்று சொன்னாராம். அவன் கடவுள்கட்டளையை மீறினபடியால் பாவத்துக்குள்ளானானும், இதை என் நாம் உண்மைஎன்று வைத்துக்கொள்ள கூடாது.

தாய்—அப்பா நீ எப்பொழுதும் மனசாக்ஷிக்கும் யுக்திக்கும் நியாயாத்துக்கும் பொருந்தாத விஷயங்களை உண்மையென்றுவைத்துகொள்ளகூடாது ஏனெனில் கடவுளுக்கு ரூபமேகிடை யாதென்றும் சொல்லுகிறார்கள். ரூபமில்லாதவருக்கு ஆவி ஊதவாய் மட்டும்எங்கிருந்து வந்தது. வாய் மட்டும் அந்தரத்திலிருந்ததென்று உன்னால் சொல்லமுடியுமோ? மேலும்கடவுள் தன்சாயலாய் மனிதனை உண்டாக்கினாரென்று சொன்னதில் கடவுளுக்கு மனித ரூபமென்று தோன்ற வில்லையா இப்பொழுது என்ன சொல்லுகிறாய்.

மகன்—அம்மா தன்சாய லென்றது ரூபமல்லவாம் நற்குணவிஷயங்களைபற்றி அப்படி சொல்லபட்டதென்று சொல்லுகிறார்கள்.

தாய்—வெகுநன்றாய்யிருக்கிறது நற்குணமென்று சொன்னால் அவன் கடவுள் கட்டளையை மீறினான் என்று சொல்லக்கூடாது. அப்படி மீறினதினால் நற்குண முள்ளவனென்று நன்றாய்விளங்குகிறது.

மகன்—அம்மாதுவக்கத் திலேயே சிருஷ்டிப்புக்கு ஆட்சேபனை வந்து விட்டது இருந்தாலும் இன்னும் சில விஷயம்கேட்டு தெரிந்துகொள்ளுகிறேன். மனிதனை படைத்தபின்பு அவன் நன்றாய் தூங்கினான் அப்பொழுது கடவுள் அவன்விலா எலும்பைஒடித்து ஒருபெண்ணை உண்டாக்கிஅவனுக்கு விவாகம் செய்வித்தார் பிற்பாடுபோம்பின்

வஞ்சகத்தால் பாவத்தில் விழுந்தார்களென்று சொல்லப்படுகிறது.

தாய்—மனிதனை படைப்பதற்கு முன்னமே பாம்பை படைத்தாரா.

மகன்—பாம்பைபபடைக்கவில்லை பாம்பு மாயாபிசாசு அப்படி வேஷமெடுத்ததாம்.

தாய்—பாம்பு ரூபமெடுக்க பிசாசுக்குகூடசக்தியிருந்தது கடவுள் சிருஷ்டிக்கும் முன்னமே தனக்கு ரூபமெடுக்க வில்லை மேலும் கடவுளா லுண்டாகப் பட்ட சரீரமும் அதற்குள்ளிருக்கும் ஆவியும்பாபம் செய்தால் அதுகடவுளுடைய குற்றமென்று தோன்றும். ஏனெனில் பரிசுத்தமான கடவுளிடத்திலிருந்து அசுத்தமான ஆவிவரமாட்டாது என்று நீ அறியவேண்டும்.

மகன்—நம்முடைய மதத்திற்கும் அப்படிதானே.

தாய்—நம்முடைய வேதத்தில் அப்படிசொல்லவில்லை பின்னை யெப்படியென்றால் கடவுளின் காரியமாகிய மாயனிடத்திலிருந்து பஞ்சபூதமுண்டாய் அந்த பஞ்சபூத பரிமாணத்தினால் தேகம் உண்டாகிறது. ஜீவாத்மாக்கள் கடவுளின் அம்சமாகிய தேஜஸாயிருந்தாலும் மகதத்துவ மென்னும் அகங்காரத்தின் வழியேவந்தபடியால் மாயாசம்மந்தபடுகிறான் இப்படிக்கிருக்கிறதைவிசாரித்தரியாமல் மாயாசம்பந்தமாகிய தேகமேநானென்று அகங்கரித்து அதற்கு சாதகமாகிய வேலைகளை செய்துகொண்டு வருகிறான் அவன் உண்மையை தெரிந்து கொள்ளாமலும் விசாரிக்காமலு மிருந்

ந்து இவனுடைய குற்றமேதவிர கடவுளுடைய குற்றமல்ல. இந்த ஜீவன் அபிமானத்தினல் புண்ணியபாவங்களை செய்து சொர்க்க நரகமென்று சொல்லப்பட்டதை யெல்லாம் கருமத்துக்குத்த குந்தபடி அனுபவித்து ஜனனம் மரணம் இதெல்லாம்ஸெ;ாக்திப்பாய்வரும்படி அறியாமையினல் செய்து கொள்ளுகிருன்.இதுவே உண்மை.

மகன்—பரிசுத்தமான கடவுளிடத்தி லிருந்து வந்த ஜீவன் ஏன்தெரிந்துகொள்ளவில்லை.

தாய்—தன்னைமறந்து மாயாசம் பந்தமான அஞ்ஞானத்தில் மூழ்கியிருப்பதாலும் ஞானமில்லாதபடியாலும் தெரிந்து கொள்ள வில்லை மேலும் ஞானம் வரமுயற்ச்சி செய்பதில்லை. இப்படியிருந்தால் எப்படிதெரிந்து கொள்வான்.

மகன்—கிறிஸ்தவர்வள் நம்முடைய வேதம் மதம்எல்லாம் பொய்யென்று சொல்லுகிருர்களே.

தாய்—அவர்கள் உண்மையை தெரிந்துகொள்ளாததினல் அப்படி சொல்லகூடும்

மகன்—அவர்வள் தகுந்த முகாந்திரம் சொல்லுகிருர்களே அப்பொழுதுசிலசமயம் என்புத்திக்கு சரியாய் தோன்றுகிறதே,

தாய்—என்னதான் சொல்லுகிருர்கள் சொல். கூடுமானல் சமாதானம் சொல்லுகிறேன்.

மகன்—நாமெல்லாம் பாவிகளாயிருக்கிறபடியால் நம்மை ரக்ஷிக்க இயேசுகிறிஸ்து பூமியில் வந்தாரெ

ன்றும் அவரை விசுவாசிக்காவிட்டால் மோக்ஷ மில்லையென்றும் சொல்லுகிறார்கள்.

தாய்—நம்மை ரக்ஷிக்க ரக்ஷகர்த்தாயிருக்கிறாரென்று நீ சொல்லக்கூடாதா.

மகன்—அம்மா அவர்யார் எனக்கு தெரியும்படி சொல்ல வேண்டும், நீங்கள் இந்து மார்க்கத்தில் சொன்ன விஷ்ணுவா.

தாய்—ஆமாம். அவர் தாயினுமிக்க அன்புடையவர், அவருடைய மகிமை அளவற்றது.

மகன்—அம்மா இராமகிருஷ்ணாதிகளை ரக்ஷகர்த்தா வென்று சிலர் சொல்லுகிறார்களே. அதென்ன விபரம்

தாய்—மகாவிஷ்ணுதான் இராமகிருஷ்ணாதிகளாகவந்தது. இந்த ரூபமெடுக்க பலகாரணமிருக்கிறது.

மகன்—இராமகிருஷ்ணாதிகளை ரக்ஷகர்த்தா வென்று நாம் சொன்னால் நம்மை பரிகாசம் செய்கிறார்களே ஏனெனில் ராமகிருஷ்ணாதிகளிடத்தில்கடவுள் தன்மை இல்லையென்றும் அவர்கள்மனிதர்களென்றும் ரட்சிக்கும் சக்தி அவர்களிட மில்லையென்றும் சொல்லி நம்மை பரிகசித்து பின் கிறிஸ்துவனிடத்தில் ரட்சிக்கும் கடவுள் சக்தியிருக்கிறதென்றும் அவர்தான்கடவுள்தன்மையுள்ளவரென்றும் சொல்லுகிறார்கள். கிருஷ்ணன் பொய் சொன்னாரென்றும் விபசாரம் செய்தாரென்றும் திருட்டுதனம்செய்வதில் அதிககெட்டிக்காரனெ

ன்றும்; இராமர் விவாகம் செய்து கொண்டா ரென்றும் அவர் ஓர் யுத்தவீரனேதவிர கடவுள் ல்லவென்றும் சொல்லி மேலும் இயேசு கிறிஸ்து விவாசம் செய்யவில்லையென்றும் குருடை யும் குஷ்டரோக முடையவர்களை ஆசாஸதமாக் கினரென்றும் இறந்தவர்களை பிழைப்பித்தாரெ ன்றும் சொல்லுகிறார்கள் இதற்கென்ன சொல் லுகிறீர்கள்

தாய்—நம்முடைய பாகவதத்தில் கிருஷ்ணபகவான் இறந்துபோன குருபுத்திரனை பிழைக்கசெய்து குருதட்சணையாக கொடுத்தாரென்றும், பாரத த்தில் பாண்டவர்களை பல இடைஞ்சலிலிருந்து காப்பாற்றி துரோபதாதேவி இராச சபையில் துரியோதனாதிகள்செய்யும் அக்கிரமங்களைபொ றுக்கமாட்டாமல் துளசிதாராவென்று துதித்த போது அளவற்ற ஆடையை அட்சயமாய் வள ரும்படி இருந்த இடத்திலேயே இருந்து அனு க்கிரகித்தாரே இப்பொழுது கிருஷ்ண னிடத் தில் கடவுள் தன்மை இல்லை என்று எப்படி சொல்லலாம்.

மகன்—அம்மா! இதெல்லாம் நாம் சொன்னல் மனி தர்கள் கட்டுபாடாய் எழுதினதென்றுசொல்லு கிறார்கள்.

தாய்—அவர்கள் புஸ்தகம்தான் கட்டுபாடாய் எழு தினதாக நாம் நினைக்கக்கூடாதோ.

மகன்—அப்படி நினைக்க ஆதாரமென்னயிருக்கிறது,

தாய்—பலவிதமான ஆதாரமிருக்கிறது எல்லாம் சொல்லவேண்டுமானுல் சாத்தியமில்லை. சில ஆதாரம் காட்டுகிறேன் முதலாவது உலகம் உண்டாய் 6000-வருஷம்தானுகிறதென்று அவர்களுடைய வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அது சரியல்லவென்று உனக்கு தெரியும்படி செய்கிறேன் தற்காலம் பூதத்வ ஆராய்ச்சி செய்யும் மனிதர்களும் ரசாயன சாஸ்திரம் கண்டுபிடிக்கும் மனிதர்களும் இந்த உலகம் உண்டாய் வெகுகாலமாச்சுதென்று நம்மதத்தின் சார்பின்படி ஒப்புக்கொள்ளுகிறுர்கள். நம்முடைய மதத்திலும் உலகமுண்டாய் பலயுகமாச்சுதென்று சொல்லப்படுகிறது மேலும் அவர்களுடையவேதத்தில்நமக்கு மற்றொரு ஆதாரமிருக்கிறது அதென்னவெனில் உலகத்தை உண்டாக்கினஉடனே கடவுள் வாக்கியமான வேதம் கொடுக்கப்படவில்லை. ஏறக்குறைய 2000வருஷத்திற்குபின்மோசேஎன்னும் ஒருமனிதன்மூலமாய் வேதம்கொடுத்தாரென்று சொல்லப்படுகிறது. இது சரியல்ல உலகம் உண்டான உடனே கடவுள் ஆக்கினுசக்கரத்திற்கு உட்பட்டு நடக்க வேண்டியகடமை மனிதர்களுக்கு ஏற்படவேண்டும். இது நியாயமாயிருக்க, 2000 வருஷத்துக்குப்பின்பு ஆக்கினே செலுத்த பிரயத்தனப்பட்டாரென்றுல் நாம் ஒப்புக்கொள்ள முடியுமா நம்முடைய மார்க்கத்தில் உலகம் உண்டானவுடனே கடவுள் ஆக்கினுசக்கரத்திற்குட்பட்டு நாம் நடக்கும்படி சட்ட திட்டங்

கள் ஏற்பட்டிருக்கிறதை நான் முன்னமே உனக்கு சொல்லியிருக்கிறேன். மோசேக்குப் பிற்பாடு இரண்டாயிரம் வருஷம்கழித்து கிருஸ்து பிறந்ததாக சொல்லப்படுகிறது. மேலும் கிருஸ்துவிவாகம் செய்துக்கொள்ளவில்லை. அதனால் கடவுள்தன்மை யிருக்கிறதென்று சொல்லக்கூடாது. கிருஸ்து விவாகம் செய்துக்கொள்ள வயது வருவதற்கு முன்னமே மரணமடைந்துவிட்டார். அதனால்தான் அவர் விவாகம் செய்துக்கொள்ளவில்லை. அக்காலத்தில் ஏறக்குறைய நாற்பத்தைந்து வயதிற்கு பிறகுதான் விவாகம் செய்துக்கொள்ளப் படுகிறதென்று அவர்கள் வேதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. ஏசுவிடத்தில் கடவுள்தன்மைகிடையாதென்பதற்கு மற்றொரு ஆதாரமிருக்கிறது, அஃதென்னவெனில் கடவுளுக்கு இயற்கையாயுள்ள குணங்களே ஏறக்குறைய அவதார காலங்களிலும் தோன்றவேண்டியது யுக்தம். மேலும் வேஷத்திற்குத் தகுந்தபடி யிருக்கவேண்டுமென்றாலும் பெரும்பாலும் உள்ள குணமே இருக்க வேண்டுமாகையால் அவர் எந்த ரூபம் எடுத்துக்கொண்டாலும் குணமும் தன்மையும் அநேகமாய் மாரமாட்டாது கடவுளானவர் எப்பொழுதும் துஷ்ட நிக்ரக சிருஷ்ட பரிபாலனம் செய்யவேண்டியது. இதன் காரணம் இப்படியிருக்க இயேசுகிறீஸ்து என்றவர் மற்றொருவரை சங்கரிக்கமாட்டாமல் அவரே ராஜதண்டனை அடைந்தவராக அவர்

கள் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நம்முடைய ராமகிருஷ்ணாதிகளுடைய சங்கதி அப்படியல்ல பின் எப்படியென்றால் அவர்கள் அவதாரம் செய்ததே லோகோபகாரம் நிமித்தமாகவும் ஆதனால் பாபங்கள் அதிகமாய்ச் செய்தவர்களையும் பிறருக்கு இடைஞ்சலே செய்தவர்களையும் நன்றாய் சிக்ஷை செய்து அதற்குமேல் அவர்களுக்கு புத்திவந்தவுடன் அனுக்கிரகம் செய்து தன்னை பக்தி செய்யப்பட்டவர்களை பாலனம் செய்து மேலும் அவர் அவதாரம் செய்வதற்கு முன் இன்னின்ன வேலைகள் முடிக்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டபடி எல்லாவேலைகளையும் முடித்து பிற்பாடு எதாஸ்தானம் சென்றார்கள். கடவுள் மற்றொருவரிடத்தில் தண்டனை யடைந்தால் அதை தெய்வத்தன்மை யென்று எப்படிச் சொல்லலாம்.

மகன்—நம்மை இரட்சிக்கும் நிமித்தம் நம்முடைய பாவங்களை பேற்றுக்கொண்டும் சிலுவையில் பலியானார்.

தாய்—வெகு நன்றாயிருக்கிறது! நம்மை இரட்சிக்க வேண்டுமென்று வந்த கடவுள்தான் தண்டனை யடைந்தால் அது ஞாயமாகுமா?

மகன்—இரக்கத்தினால் நம்முடைய பாவங்களை ஏற்றுக்கொண்டு பாவநிவாரணத்திற்காக அவர் அப்படி பலியானாராம்.

தாய்—அவர்கள் அப்படிச் சொல்லும்பொழுது உன க்கு என் யோசனையில்லாமற் போய்விட்டது; உலகம் உன்டாகி எத்தனையோ கோடி வருஷம் ஆயிருக்கிறது உலகம் உண்டான நாள்முதற் கொண்டு ஜனங்கள் துர்குணத்தினாலும் நற்குண த்தினாலும் பாவபுண்ணியங்களைச் செய்து அதற் குத் தகுந்தபடி லாப நஷ்டங்களை அனுபவித் திருக்கிறார்கள். இன்னும் எத்தனையோ தடவை ஜனனமெடுத்துஎத்தனையோதடவைமரணமடை ந்து வருகிறார்கள். இன்னும் எத்தனையோ பேர் கள் மனம்பக்குவமடைந்து பகவான்கிருபையால் ஒருபத்திரவமுமின்றி மோக்ஷ-மடைந்திருக்கி றார்கள். இயேசு பிறந்து இன்னும் இரண்டா யிர வருஷம் ஆகவில்லை அதற்கு முன் இருந்த வர்களை யெல்லாம் யார் இரக்ஷித்தார்கள் என்று நீ ஏன் கேட்கக்கூடாது இதில் முக்கியமாய் நீ ஒன்று தெரிந்துகொள்ளவேண்டும். உலகம்வுண் டாகி இப்பொழுது ஏறக்குறைய ஆறாயிரம் வரு ஷம் ஆகிரதென்று சொல்லுகிறார்களல்லவா! அவர்கள் புதிதாக ஒரு மதம் ஏற்படுத்தவேண்டு மென்று முயற்சி செய்ததிலிருந்து இப்பொழுது ஆறாயிரம் வருஷம் ஆகிறது. அதிலிருந்து சீர் திருத்தம் உண்டாகிக்கொண்டே வந்து கிறீஸ்து பிறந்தபின்பு கிறீஸ்துவ மதம் என்று பெயரிட் டார்கள். கிருஷ்ணன் விபசாரம் செய்தாரெ ன்று அவர்கள் சொல்லுவது சுத்தப்பிசகு ஏனெனில் உட்பொருளாகிய பரிசுத்தமான.

கடவுளே இந்தக் கிருஷ்ணனென்று நீயறியவே
ண்டும். அதன் ரகசியம் அவர்கள் அறிந்திருந்
தால் அப்படிச் சொல்லமாட்டார்கள். கடவு
ளுடைய பக்தர்களாகிய முனி சிரேஷ்டர்கள்
மனோலயத்துடன் கடவுளிடத்தில் ஜீவாத்மா
வை ஐக்யம் செய்து ப்ரம்மானந்தமாக இருப்
பது போலவே வெளிப்பொருளாயும் ஜகன்மோ
கனாகார சொரூபராயும், இருக்கிற கிருஷ்ணனை
யடைந்தார்கள்.

மகன்—அம்மா! அதற்குக் காரணமென்ன?

தாய்—துஷ்ட நிக்கிரகம் செய்யும்பொருட்டு ராமர்
காட்டிற்குப்போனார். அங்கே அநேக ரிஷிகள்
ராமரைக் காட்டில் தரிசனம் செய்து பிரபுக்
களுக்கெல்லாம் பிரபுவாயிருக்கிற தேவாதி தேவ
னாகிய தாங்கள் லோகோபகார நிமித்யமாக மனி
தரூபமெடுத்து துஷ்ட ராவணாதி ராக்ஷசர்களை
சம்கரித்து உலகத்துக்கு உபகாரம் செய்தீர்.
அதற்காக நாங்கள் உம்மைத் துதிக்கிறோம்.
தேவரீரை ஞானத்தினால் நாங்கள் ஐக்யமடைந்து
சுகமடைவது போலவே வெளிப்பொருளாகிய
உம்மை அடையக்கோருகிறோம் என்று சொன்
னார்கள். அதற்கு சுவாமி என்னவுத்தரவு சொன்
னாரென்றால், இது இப்பொழுது நிறைவேற்ற
மாட்டாது. துவாபரயுக அந்த்யத்தில் ஜகன்
மோகனாகாரமாகிய கிருஷ்ணாவதாரத்தை எடுத்
துக்கொண்டு துஷ்ட நிக்கிரகம் சிஷ்ட பரிபால

னம் செய்வோம். அப்பொழுது உங்களுடைய எண்ணமெல்லாம் நிறைவேறும் என்று சொன்னார் பிறகு துவாபரயுகத்தில் கிருஷ்ணன் அவதாரஞ்செய்தவுடனே மேற்சொன்ன ரிஷிகளும் ஸ்திரீகளாய்ப் பிறந்தார்கள். பிறந்த அவரை விவாகஞ் செய்துக்கொண்டு அவர் பாதங்களைப் பணிந்து திவ்யமங்கள விக்கிரகமாகிய திருமேனி ஸ்பரிசத்தினாலும், தரிசனத்தினாலும் ப்ரம்மானந்தமடைந்து திருப்தியாயிருந்து பந்தத்தையறுத்து மோட்சமடைந்தார்கள் இதைக்குறித்த கதைகள் பாகவதத்தில் விபரமாய்ச் சொல்லப் பட்டிருக்கிறது. அதை அன்னியமதக்காரர்கள் படித்துக்கொண்டு வாய்கொண்டமட்டும் வம்புப் பேச்சுகளைப் பேசுகிறார்கள். அப்படிப் பேசினதினால் நம்முடையமதத்திற்கு ஒருகுறைவும் வந்துவிட மாட்டாது. ஆகையினால் அவர்களைத் துவேஷித்துச் சண்டைசெய்யாதே. அவர்களுடன் சிநேகம்செய்யப் பிரியமிருந்தால் சிநேகமாயிரு. நம்மதத்தைக்குறித்து கேவலமாய்ப்பேசும் பொழுதுமட்டும் அவர்களுக்குஇடம்கொடாமல் இருக்கவேண்டியது முக்கியமான விஷயம். கடவுள் தன்மை இராமகிருஷ்ணாதிக ளிடத்திலும் அவர்களை மனப்பூர்வமாக யார் பக்தி செய்கிறார்களோ அவர்களிடத்திலும்தான் விளங்கக்கூடும் இதற்குச் சமுசயமில்லை. கிருஸ்து மறுபடியும் உயிர்த்தெழுந்தார் என்று சொல்லப்படுகிறது. அது சரியல்லவென்றே நாம் நினைக்கவேண்டும்.

அவர்களுடைய மார்க்கம் பரவவேண்டுமென்று அப்படிச் சொல்லுகிறார்கள். எப்பொழுதும் ஒருவரையொருவர் தூஷிப்பது கெட்டதென்று சொன்னேனல்லவா? கிருஸ்தவர்கள் பொழுது போகாமல் நம்முடைய மதத்தைத் தூஷித்துப் புஸ்தகம் எழுதுகிறார்கள். நாமும் அப்படிச்செய்தால் பிரயோஜனமென்ன? மேலும் நான் இவ்வளவுசொன்னதுகூட நீகேட்டகேள்விக்கு சமாதானம் சொல்லவேண்டியது அவசியமாகையால் சொன்னேனே தவிர, மததூஷணை செய்யவேண்டுமென்பது என்னுடைய கருத்தல்ல, முக்யமாய்நாம்தெரிந்துக்கொள்ளவேண்டியது என்னவெனில் எந்தமதத்தைககொண்டாலுமுடனே மோட்சமென்பதுகிடையாது இதுவுண்மையே அந்தந்தமதத்தில்சொல்லப்படுகிற சன்மார்க்கங்களையனுசரிக்கவேண்டும்கடவுளையும்நேசித்து பூசித்துவிசுவாசிக்கவேண்டும். இப்படி சிரத்தையாய் செய்துகொண்டு வருகிறவர்கள். மோட்சமடைவார்கள். மற்றவர்களால் மோட்சமடைய முடியாதென்பதும் தெரிந்தவிஷயமே. அப்படி படி படியாய் உபாய சுலபமான படிகள் நம்மதத்தில் சொல்லபட்டிருக்கிறது மேலும்நம்முடைய மதம் கடவுளாலே ஆதியிலிருந்து வந்ததென்பதற்கு சந்தேகமே இல்லை. ஆகையினால் நீ நம்முடையமதத்தை தழுவி அனுசரிக்க வேண்டியது உன்னுடைய கடமை.

மகன்—நம்முடைய மதம் கடவுளாலேற்படுத்தின தற்கு ஆதாரமேதாவதுண்டா?

தாய—நம்முடைய மதம் கடவுளாலேற்படுத்தபட்ட தென்பதற்கு சில ஆதாரம்சொல்லுகிறேன் ஆதி காலத்தில் நம் இந்து மார்க்கமுண்டானது அத ற்குமேல் அநேக மதம் ஏற்படுத்தினர்கள். கிரு ஸ்து வென்பவரால் ஏற்படுத்தப்பட்ட மதத்தி ற்குக் கிருஸ்துவ மதமென்று பெயர். மகம்மது என்பவரால் ஏற்படுத்கப்பட்டமதத்திற்கு மகம் மதியமதமென்றுபெயர் புத்தரால் ஏற்படுத்தப் பட்டமதத்திற்கு புத்தமதமென்றுபெயர் கட வுளே யில்லையென்று சொல்லிக்கொண்டுதிரிந்த ஒருவனுல் ஏற்படுத்திய மதத்திற்கு நாஸ்திகமத மென்றுபெயர். மேலும் யூதமார்க்கம், சமண மதம் என்று அநேகமதங்கள் ஏற்பட்டது. நம் தேசத்திலேயே இந்துமதத்தை ஆதாரமாகவை த்துக்கொண்டு சிலமதங்கள் ஏற்படுத்தினர்கள்.

மகன்—நம்மதத்தில் பிரிவுள்ள மார்க்கங்கள் என் னென்ன?

தாய்—சைவமதமென்றும், வைஷ்ணவ மதமென்றும், மத்வமதமென்றும் பிரிவுகளுண்டு. இருந்தபோ திலும் இந்துமதத்தின் பிரிவுகள் பொதுவாக கடவுள்சம்மதமாகவே நடந்துவருகிறது. இந்து மதம் ஓர் மனிதனுல் ஏற்படுத்தவில்லை யென்பது நமக்கு நன்ருய் விளங்குகிறது. அந்நியமதக்கா ரர்கள் நம்முடையமதத்தைக் குறித்துப்பேசும்

யொழுது ஓர் மனிதனுடையபெயரை உச்சரிக்க இடமில்லாததினல் தேசத்தினுடைய பெயரை வைத்தார்கள்.

மகன்—அம்மா! தேசத்தினுடைய பெயரை வைப்பானேன்?

தாய்—ஏனென்றால் இதர மதஸ்தர்கள் நம்முடைய மதம் ஆதியிலிருந்து தெய்வத்தினலேயே உண்டானதென்று சொல்லமாட்டார்கள். அப்படிச் சொன்னல் உண்மை வெளிப்பட்டுப் போகும். அதனல்தான் இந்துமதமென்று தேசத்தின்பெயரைக் குறித்துச் சொல்லுகிறர்கள். வாக்குக்கும் மனதுக்கும் அகோசரமா யிருக்கும் உட்பொருளானகடவுளைத் தெரிந்துகொண்டு பக்தி செய்வதென்றால் இலேசான காரியமல்ல ஆகையினல் பெரியோர்கள் நமக்கு விதித்தபடி கடவுளை பக்திசெய்யவேண்டும். பக்தியினல்ஞானம் உண்டாகி, ஞானத்தினல் மோட்சமடைய வேண்டுமே தவிர, வேறே உபாயம் கிடையாது.

மகன்—அம்மா! அப்படியே இந்துமதப்படி நான் அனுசரிக்கிறேன். மகம்மதுமார்க்கத்தில் என்ன சொல்லுகிறது அதையும் கொஞ்சம் சொல்ல வேண்டும்.

தாய்—அதுவும் கிருஸ்து மதத்தில் பிரிந்தபிரிவுதான் உலகசிருஷ்டிப்பு முதலிய விபரம் கிருஸ்தவர்களுக்குச் சொன்னதுபோலதான் சிலதுதான் வித்தியாசமிருக்கும்.

மகன்—புத்தமத மென்றார்களே அதென்ன?

தாய்—புத்தர் மகாவிஷ்ணுவின் அவதாரமென்றுசொல்வதுண்டு. ஆனால் பூரணவதார மில்லையென்றறியவேண்டும். ஏனெனில், அதில் கடவுளை ஆராதிக்கும்வழி சொல்லவில்லை. ஆனால் மனிதர்கள் நற்குணமாயிருக்கவேண்டுமென்றும், ஜீவகாருண்யமா யிருக்கவேண்டுமென்றும் வற்புறுத்தி சொல்லுவதும் தவிர, சன்யாச வேஷமும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் நற்குணங்களிருந்தால் பாவமடைய மாட்டார்களென்றும், அவர்களுடைய கொள்கை.

மகன்—அம்மா! இந்த புததமார்க்கம் நல்லதாகதோற்றுகிறதே

தாய்—அதற்கென்ன சன்மார்க்கவிஷயம் எந்த மதத்தில் போதித்தாலும் சாதாரண மனிதர்கள் போதித்தாலும் நாம் அந்த நற்குணங்களை எடுத்துக் கொள்ளவேண்டியது அவசியம். தேனீக்கள்பல புட்பங்களிலிருந்து தேன்சேர்த்துக் கொள்வது போல நாமும் நற்குணங்களைக்கிரகிக்கவேண்டும் மேலும் நவரத்தினங்கள் எந்தயிடத்தில் சிந்தியிருந்தாலும் அதை நாம் பொறுக்கி சரட்டில் கோத்து ஹாரமாய் தரித்துக் கொள்வதுபோல நம்முடைய மனதென்னும் சரட்டில் பலமார்க்கங்களிலுள்ள நற்குணங்க ளெல்லாவற்றையும் பொறுக்கி கோத்துவைத்துக் கொள்வதும் உத்தமமே.

மகன்—அம்மா! புத்தன் மகாவிஷ்ணுவி னவதாரமெ ன்றீர்களே; மகாவிஷ்ணுநம்முடைய கடவுள்தா னே, அவர் கொள்கைகளை நாம்மறுக்கக்கூடுமோ?

தாய்—அதன் விபரமும் சொல்லுகிறேன். புத்தாவதா ரமும் மகாவிஷ்ணுவின் அவதாரமென்றுசொன் னலும், அதில் சிலரகசியமிருக்கிறது. துஷ்டநிக் ரக சிஷ்ட பரிபாலனம் செய்வது அவருடைய கடமையாதலால், முற்காலத்தில் துஷ்டராகிய அரக்கர் சிலரிருந்தார்கள் அவர்கள் சிரத்தை யாக கடவுளைமாத்திரம் பூஜைசெய்துகொண்டு ஜனங்களை இம்சை செய்துகொண்டும் வந்தார் கள். அவர்களைச்சம்ஹரிக்க வேண்டியிருந்தால் சம்ஹரித்தால் நீதிக்குவிரோதம், சம்ஹரிக்கா விட்டால் ஜனங்களுக்கு இம்சையாயிருக்கிறது. மேற்கூறிய விஷ்ணு பாலனகர்த்தாவர்தலால் ஓர் உபாயம்தேடினர். அந்த உபாயந்தான் இந்த புத்தாவதாரமெடுக்கக்காரணம். இவர் சன்யாசி வேடம் தரித்துக்கொண்டு அரக்கரிருக்குமிடத் திற்குப்போய் கடவுளைபூஜைசெய்யக் கூடாதெ ன்றும், பக்திசெய்யக்கூடாதென்றும், இதில்பிர யோஜனமில்லையென்றும், மனிதனுக்கு நற்குண மேமேலானதென்றும்சொல்லிப் பின்னும் அந்த நற்குணத்தினலும், ஜீவகாருண்யத்தினலு மிற ப்பு, பிணி, மூப்பு, மரணம் இவையெல்லாம் நம் மை தீண்டமாட்டாவென்று தந்திரமாகப் போ தித்தார். அவர் இனிமையான பேச்சுகளைக்கே

ட்டு பிரமித்து யாதொன்றும் தீரவிசாரிக்காமல் பூஜைசெய்யும் தொழிலேயும், பக்தியும் விட்டு விட்டார்கள். அவர்கள் பூஜையைத்துறந்தவுடன் இனி இவர்களேச் சம்ஹரித்தால் நீதிக்கு விரோதமல்லவென்றுநினேத்து சம்ஹாரகர்த்தாவாகிய பரமசிவனேக்கொண்டு சம்ஹரித்தார். இப்படிச்செய்தவுடன் ஜனங்கள் சுகப்பட்டார்கள். இதுதான் புத்தமத விபரம்.

மகன்—அம்மா! அவர் அப்படிச் செய்தது நியாயமாகுமா?

தாய்—கடவுள் தன்னே ஜனங்கள் பூஜிப்பதை நினேத்து சந்தோஷப் படுவதைவிட ஜனங்களுக்கு இம்சைசெய்யாமல் லோகோபகாரம் செய்யும் மனிதர்களேக்கண்டு சந்தோஷப் படுவாரென்று நீ அறியவேண்டும் விஷ்ணு உலகத்துக்குத் தாயைப்போல நன்மைசெய்கிறவர். ஆகையினுல் நீதியாய் ஜனங்களுக்கு நன்மையாயு மிருக்கும்படி அப்படிச் செய்தார். புத்தமார்க்கத்தில் ஆத்மா அனுத்மா தன்மங்களேப்பற்றிச் சொல்லாததினுல் அம்மார்க்கம் நமக்கு உபயோகமில்லேயென்று நம்முன்னேர்களாகிய மகான்கள் தள்ளிவிட்டார்கள். அதனுல் புத்தமதம்நமக்கு யுக்ததல்ல. இன்னும் பலமார்க்கங்களும் சரியல்லவென்றுநினேத்து இந்துமார்க்கமே உண்மையென்று மகான்கள் நிச்சயித்திருக்கிறபடியால்

நாம் நம்முடைய மதமே நியாயமானதென்று அனுசரிக்கவேண்டும்.

மகன—அம்மா! அந்நியமதவிஷயங்கள் விபரமாய்த் தெரிந்துக்கொண்டபோதிலும் இன்னும் அதில் சம்பந்தப்பட்ட விஷயம்சிலதை தெரிந்துக்கொள்ளவேண்டுமென்று அபேட்சிக்கிறேன். அதென்னவெனில், அந்நியமதக்காரர்கள் பூர்வஜன்மம் கிடையாதென்றும், மறுஜன்மமும்கிடையாதென்றும் சொல்லுகிறார்களே அந்த விஷயம் சொல்லவேண்டும்.

தாய்—அதைக்குறித்து அடுத்தவாரம் தெரிவிக்கிறேன்; இப்பொழுதுநேரமில்லை ஆகையால் சொல்வதற்கில்லை. மேலும் நீ இரவுபாடம் படிக்கவேண்டும்; எனக்கும் வீட்டில் வேலையிருக்கிறது. இன்றையதினம் நான்சொன்ன விஷயங்களை நீ நன்றாய் ஞாபகத்தில் வைத்துக்கொள். அந்நிய மதம் மத்தியில் ஜனங்களால் ஏற்படுத்தப்பட்டது. நம்மதம் ஆதியிலிருந்து உண்டானது இதை மறந்துவிடாதே.

மகன்—இல்லை ஞாபகம் வைத்துக்கொள்வேன்.



# ஜன்மாந்தரம்.

## 3-வது, அத்தியாயம்.

மகன்—அம்மா! இப்பொழுது இந்த இடத்தில் ஏகாந்தமாயுட்கார்ந்துக்கொண்டு என்னமோயோசித்துக்கொண்டிருக்கிறீர்களே அதென்ன விஷயம்?

தாய்—அப்பா! நான் பலவிஷயங்களைக்குறித்து அடிக்கடி யோசிப்பதுண்டு. அப்படி யோசிப்பதனால் அநேக சங்கதிகள் மனதிற்குப்புலப்படும்.

மகன்—என்னென்ன விஷயங்களைக்குறித்து யோசிப்பது வழக்கம் அதன் விபரமும் எனக்குச் சொல்லவேண்டும்.

தாய்—தற்கால தேசநிலைமை, மதவிஷயம். ஜன்மாந்தரம், புனர்ஜன்மம், குடும்பசமாசாரம், நாமிருக்கும்நிலைமை, படிப்படியாய் உயரவேண்டியஉபாயம் இன்னும் இதைச்சார்ந்த பல விஷயங்களையும் குறித்து யோசிப்பது வழக்கம்.

மகன்—அம்மா அதனால்தான் எந்த விஷயத்தைக்குறித்துக் கேட்டபோதிலும், தாமத மில்லாமல் சீக்கிரம் பதில் சொல்லுகிறீர்கள். எனக்கப்படி யோசிக்கும் சக்தியில்லையே, ஏன்?

தாய்—நீ சிறுவனானதால் இப்பொழுது யோசிக்கும் சக்தி அதிகமாயிருக்கமாட்டாது. காலம் செல்லச்செல்ல நற்குண நற்செய்கைகளுக்குத் தகுந்தபடி உனக்கு யோசிக்கும் சக்தி அதிகமாகும்.

இன்னும் நான் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் பலயிருக்கும். முழுவதும் எனக்குத் தெரிந்ததாக நீ நினைக்கவேண்டாம். எனக்குத் தெரிந்தவரையிலும் உனக்குப் போதிக்க வேண்டிய விஷயங்களைப் போதிக்கிறேன். இப்பொழுது வீட்டுவேலைகளெல்லாவற்றையு முடித்து சாவகாசமா யுட்கார்ந்திருக்கிறேன். அதனால் நீ கேட்கவேண்டிய சங்கதிகளைக்கேட்டால் சொல்லுகிறேன்.

மகன்—அம்மா! ஜன்மாந்தர விஷயங்களைத் தெரிந்துக்கொள்ளவேண்டும். இதரமதஸ்தர்கள் பூர்வ ஜன்மங்கிடையர்தென்றும், மறுஜன்மமுங்கிடையாதென்றும் சொல்லுகிறார்களே அதன் விபரம் எனக்குச்சொல்லவேண்டும்.

தாய்—புனர்ஜன்மவிஷயத்தைப்பற்றி நானும் சந்தேகப்பட்டு சில கிரந்தங்களை வாசித்தும், பெரியோர்களிடத்தில்கேட்டும் தெரிந்துக்கொண்டிருக்கிறேன். அதைக்குறித்து நான் நிச்சயித்திருக்கிற பிரகாரம் உன்னுடைய புத்திக்குப் பொருந்தும்படி சிற்சில விஷயங்கள் கூடியவரையிலும் உனக்குத்தெரிவிக்கிறேன். அதாவது மனிதர்களுக்கு அனாதியிலிருந்து பிரகிருது சம்பந்தத்தால் ஜன்மங்கள் அநேகம்வந்திருக்கிறது. இன்னும் மறு ஜென்மமும் அநேகமுண்டு. ஒவ்வொரு ஜன்மத்திலும் அவனவன்செய்தகருமானுசாரத்திற்குத் தகுந்தபடி பலனடைவான். பூர்வஜென்மமிருக்

கட்டும்; பிறகு தெரிவிக்கிறேன். இதரமதஸ்தர்கள் மறுஜென்ம மில்லையென்று சொன்னால் மனிதர்கள் இறந்தபிறகு எங்கேபோகிறார்களென்று கேட்டுத்தெரிந்துகொண்டாயா?

மகன்—தெரிந்துகொள்ளவில்லை.

தாய்—பின் அவர்கள் மனிதர்கள் இறந்தபிற்பாடு எவ்விடத்திற்குப் போகிறதாக சொல்லுகிறார்கள்.

மகன்—இன்ன இடத்திற்கு என்று சொல்ல வில்லை ஆனால் கடைசிகாலத்தில் அவர்களுடைய மதகர்த்தாவந்து நியாயங்களை விசாரித்து பாவிகளையெல்லாம் நரகத்தில்தள்ளி புண்யாத்மாக்களையெல்லாம் மோட்சத்தில் சேர்ப்பிப்பாராம். இப்படித்தான் எனக்குச்சொன்னார்கள்.

தாய்—சரி, அப்படியே வைத்துக்கொள்வோம். மரணகாலத்தில் ஜீவன் சரீரத்தைவிட்டுப் பிரிந்துபோகிறதென்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். இப்படியிருக்க, அந்தஜீவன் அரூபியாயிருக்கிறபடியால் ஓர் உடலை அபேட்சிக்கும்படியிருக்கும். கடைசிநாளில் கடவுள் இந்தஜீவனுக்கு ஒருஉடலைக்கொடுத்து தானே நரகத்திலாவது, மோட்சத்திலாவதுசேர்ப்பிக்கவேண்டும். என். அப்படித்தானே?

மகன்—அவர்கள் அப்படி செய்கிறதாக சொல்லவில்லை. இறந்தவர்களையெல்லாமெழுப்புவார். எழு

ப்பி நரகமோட்சம் கொடுப்பார் என்றுசொல்லப் படுகிறது.

தாய்—இறந்துபோன ஜனங்களின்தேகம் மண்ணோடு மண்ணாய் மறைந்துகரைந்துபோகும் என்பதில் சந்தேகமில்லை. இப்படி நாற்றமெடுத்து உறுப் புடி இல்லாமல் இருக்குப்பொழுது கடவுள்ஜீவ னுக்கு வேறேதேகம்கொடுக்கும்படியாயிருக்கும். அப்படி வேறேதேகம்கொடுத்தால் அது புனர் ஜன்மமில்லாமல் என்னவென்று நினைக்கிறாய்.

மகன்—அவர்கள் அதேதேகம் எழுப்புவதாக சொ ல்லுகிறார்கள்

தாய்—அட்படிசொன்னால் அது புனர்ஜன்மந்தான் அதில் சந்தேகமென்ன? கடவுள் உறுப்படி இல் லாத தேகத்தை புதிதாய் தன்னுடைய சக்தியி னால்செய்கிறார். ஓர் நகையை ஒடிந்துவிட்டதெ ன்று அதையுருக்கிப் புதிதாய் மறுபடியும் நகை யாகச்செய்தால் அப்பொழுது அதை புதிதாய் செய்யப்பட்டதென்று சொல்லப்படும். அதைப் போல ஜீவனுக்கு அதேதேகம் சிருஷ்டித்துக் கொடுத்தால் அது புனர்ஜன்மமென்று உனக்கு விளங்கவில்லையா?

மகன்—பின் ஏன் அவர்கள் புனர்ஜனமம் கிடையா தென்று கொள்ளுகிறார்கள்.

தாய்—மனிதர்கள் எழுதின வேதத்தில் மனிதர்களு டையபுத்திக்கு எவ்வளவுதூர மெட்டுமோ அது

வளவுமாத்திரம் எழுதுவார்கள். ஆகையினல் முடிவுசங்கதியை இப்படி எழுதியிருக்கிருர்கள். அதைக்குறித்து உனகருக்கவலையென்ன? மோக்ஷ மடையத் தகுதியுள்ளவனே மோக்ஷமடைவான். அப்படி மோக்ஷமடையத் தகுதியில்லாதவன் அவனுடைய பாவபுண்ணியத்திற்குத்தகுந்தபடி ஜனனமெடுத்துநன்மைதின்மைகளை அனுபவிக்க வேண்டியது நியாயந்தானே. இப்படியிருக்க, இதை எப்படி மறுக்கக்கூடும். மேலும் பூர்வ ஜென்மமென்னவென்ருல், குருடன், முடவன், குஷ்டரோகி, நொண்டி, அதிக தரித்திரனுகவும் பிறக்கிருர்களல்லவா? இதெல்லாம் பூர்வஜென்ம த்தில் அவனவன்செய்த பாவத்திற்குத் தகுந்த படி தண்டனையடைகிருனென்று நீயறியவேண் டும்.

மகன்—அம்மா! அவர்கள்சொல்வது கடவுளுடைய மகிமை வெளிப்படவேண்டுமென்று அப்படிசிரு ஷ்டித்தாராம்.

தாய்—வெகுநன்ருயிருக்கிறது. கடவுள் தன் பெரு மையினிமித்யம் நிரபராதியான மனிதர்களை குருடராக்கவேண்டுமென்று நினைத்தால் கடவு ளுக்கும் அறிவில்லாத மனிதர்களுக்கும் என்ன பேதமென்று நீ நினைக்கிருய்? மனிதரில்கூட சில உத்தமகுணமுள்ள மனிதர்கள் தன்னுடையநன் மைக்காகவாவது, பெருமைக்காகவாவது பிறரு

க்கு இடைஞ்சல் செய்யமாட்டார்கள். அப்படி யிருக்கும்பொழுது தயவும் நீதியுமுள்ள பரிபூர ண பரப்ரம்மசொரூபமாய்விளங்குமகடவுள் தன் பெருமைக்காக இதரர்களை இம்சை செய்தாரென்றால் அது உன்புத்திக்குப் பொருந்துமா?

மகன்—அம்மா! கடவுள் ஒருவனை பணக்காரனாகவும் வேறொருவனை ஏழையாகவும், இன்னொருவனை அரசனாகவும், மற்றொருவனை சேவகனாகவும் ஏன் படைத்தார்?

தாய்—நான் முன்னமே சொன்னேனே. அவனவன் செய்த நல்வினை தீவினைதான் காரணமென்று. அப்படி பிறப்பது நியாயந்தானே.

மகன்—நியாயம் எப்படியாகும்?

தாய்—தப்பிதத்திற்குத் தகுந்தசிட்சையடையும்பொழுது இனி இப்படி தப்புசெய்ய கூடாதென்று புத்திவந்து சீர் திருந்துவான். இதைக்குறித்து விளக்கமாய் தெரிவிக்கிறேன். தெய்வ சட்டங்களை யனுசரித்தே அரசாங்கத்தில் சட்டங்கள் ஏற்பட்டிருக்கிறது. அரசாட்சி நீதியாய் நடந்துக்கொண்டு வரும்பொழுது பிரஜைகள்குற்றங்கள்செய்தால்தண்டிக்காமலிருக்கக்கூடுமா? அது முடியாத விஷயம். இப்பொழுது இதை நியாயமல்லவென்று மறுக்கலாமோ?

மகன்—குற்றவாளி மன்னிப்பு கேட்டால் மன்னிக்க மாட்டார்களா?

தாய்—மன்னிப்புகேட்டாலும் அதில் தாரதம்யமிருக்கிறது. அதென்னவெனில், குற்றவாளிக்கு ராஜ சட்ட மின்னதென்று தெரியாமலிருந்து தப்பிதம்செய்தால் இதைகுறித்து சிலசமயம் மன்னிக்கப்படுவான் மேலும் அன்னிய தேசத்தானுகிய ஒருவனுக்கு இந்ததேச சட்டம் தெரியாமலிருந்து ஏதாவதுசொற்பகுற்றம்செய்தால் ஒருவேளை மன்னிப்பார்கள். எல்லாம்விபரமாய்த்தெரிந்தவன் குற்றம்செய்துவிட்டு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளலாமென்று அகம்பாவத்தினுல் குற்றம்செய்தால் கட்டாயம் தண்டிக்கப்படுவான். சந்தேகமில்லை. அரசாங்கத்தில்தண்டிக்காமல்விட்டுவிட்டால் குற்றம்செய்தவன் திருந்த முடியாது. மேலும் மேலும் பிசகுசெய்வான். இதைப்போல கடவுளும் தண்டிப்பார். கடவுள் தண்டனை பெரும்பாலும் மரணத்திற்கு பின் என்று சொல்வதும் யுக்தமே. அப்படித்தண்டிப்பதும் அவனவனுடைய பாவபுண்ணியங்களை சீர்தூக்கிப் பார்த்து புண்ணியம் ஜாஸ்தியாயிருந்து பாவங் குறைவாயிருந்தால் புண்ணியத்திற்குத் தகுந்தபடி அவன் சுகமடையும்படி செய்வார். புண்ணியங் குறைவாயும், பாவம் ஜாஸ்தியாயுமிருந்தால் அதற்குத்தகுந்தபடி தண்டனையளிப்பார். மேற்சொன்ன கூன், குருடு, நொண்டியாய்ப்பிறந்தவர்கள் விபரீதபாவம் செய்தவர்களென்று நீயறியவேண்டும். இப்படி தண்டனை யடைய வேண்டியது நியாயம்தான். இதைப்போலவே ஒவ்வொருவ

ருடைய நிலைமையும் நீ தெரிந்துகொள்ளவேண்டியது. இன்னுமிந்தப்பாவபுண்ணிய விஷயங்களில் ஆகாம்ய, சஞ்சித, ப்ராரத்துவ மென்று மூன்றுவிதமாய் வகுக்கப்பட்டிருக்கிறது. இதைக் குறித்தவிஷயங்கள் நம்முடைய கிரந்தங்களில் விஸ்தாரமாய் சொல்லப்பட்டிருக்கிறபடியால் நீ அதைப்படித்துத் தெரிந்துக்கொள்ளலாம்.

மகன்—சரி அப்படியே படிக்கிறேன். ஜீவர்கள் பாவ புண்ணியஞ்செய்து ஜனனமரணமடைந்து, மறுபடியுஞ் கரும விசேஷத்தினல் ஜனனமெடுத்து, பாவபுண்ணியஞ்செய்து மறுபடியும்ஜனனமடைந்துகொண்டேவந்தால் என்றைக்குத்தான் ஜீவர்கள் விமோசன மடைவார்கள்.

தாய்—என்னருமை மைந்தனே! நீ சரியானக்கேள்வி கேட்டாய். விமோசனத்திற்குதான் மோக்ஷமென்று அர்த்தம் அந்த மோக்ஷ மடையவேண்டுமென்று எப்பொழுது மனிதனுக்கு மனப்பூர்வமாய் நினைவுண்டாகிறதோ, அப்பொழுதே இந்தப் ப்ரம்மாண்டத்திலுள்ள அநேக மண்டலங்களில அநேகஜன்மமெடுத்து அநேகவிஷயங்களை அனுபவித்தில் கண்டறிந்து நன்றாய் திருத்தப்பட்டிருக்கிறனென்று நீயறிந்துகொள்ளவேண்டும். அதற்குமேல் மோட்சமடைய பிரயத்தனம்செய்வான் அந்தநினைவு உண்டாகிறதற்குமுன் மோட்சமடைய வேண்டுமென்றும் அதற்கு பிரயத்

தனம் செய்யவேண்டுமென்றும் தோன்றவே மாட்டாது.

மகன்—அம்மா நீங்கள் சொல்வதெல்லாம் புத்திக்கு பொருந்தினதாக இருக்கிறது. மேலும் எனக்கு சந்தோஷமுண்டாகிறது. வீண்பொழுதுபோகாமல் நல்லவிஷயங்கள் அறிந்துகொள்வதும் என்னுடைய நன்மைக்கென்று நினைக்கிறேன் நீங்கள் சொன்னவிஷயத்தில் மோட்சமடைய தகுதியல்லாதவன் இறந்துபோனால் எங்கேபோகிறான்?

தாய்—அவனவன்மனம் பக்குவமடைந்ததற்குச் சரியாய் வைக்கப்படுவார்கள். இதையே விவரமாய் சொல்லுகிறேன். மனத்தாலும் வாக்காலும் பணத்தினாலும் புண்ணியம் செய்தவர்கள் மானஸ பூமியில் சுவர்க்க சுகமடைவார்கள். அந்தபுண்ணியம் தீர்ந்தவுடனே மனுஷஜென்ம மெடுப்பார்கள். இப்படி பாவம்செய்தவன் நரகத்தில் கஷ்டங்களை அனுபவிப்பான். பிறகு மனுஷஜன்மமெடுப்பான். இந்தவிஷயத்தில் அநேகவிதரசாயனமிருக்கிறது. அதை விவரிக்க முடியாதுபோலிருக்கிறது. இருந்தாலும் உபாயமாய்தெரிவிக்கிறேன். அனாதியிலிருந்து ஜீவன் பிரகிருதிசம்மந்தத்துடன் சிருஷ்டிக்கப்பட்டு பலவிஷயங்களை ருஜிவில் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும்சங்கற்பத்தினால் மனிதனாகிறான். இதுதான் முதல்ஜன்மமென்று மகான்கள்தெரிவித்திருக்கிறார்கள். பிரகிருதிசம்மந்தமான தேகத்தையடை

ந்தவுடன் சீவன் அந்ததேகம் தனக்கு சாதகமா
ய்க் கொடுக்கப்பட்ட தென்று அறியாமல் அந்த
தேகமே தானென்று மோகிக்கிருன். அந்தமோ
கத்தினுல் தேகத்துக்கு வேண்டிய வேலைகளைச்
செய்வதும் தேகமிறந்துபோனுல் என்னசெய்வ
தென்று யோசனையில்லாமல் அநேக செய்கை
களைச்செய்வான். அப்படிசெய்வதும்அவனுக்கு
சுபாவமாகவே தோன்றும். மேற்கூறியசெய்கை
நல்லதானுல் புண்ணியமென்றும், பொல்லாததா
னுல் பாவமென்றும் சொல்லப்படுகிறது. அத
னுல் தகுந்தபடி சிட்சையடைந்து திருத்திக்
கொண்டேவருகிருன்.

மகன்—அம்மா தாங்கள் மேலேசொன்ன சொர்க்கா
திசுகம் என்று சொன்னீர்களே அதன் விபர
என்ன ?

தாய்—அதையும் சொல்லுகிறேன்கேள். நாம் ஒரு
பெரிய கட்டடம் கட்டுவதாக தீர்மானித்து
அதற்காக வேண்டியசாமானும் சேகரித்துகொ
ண்டு இது எத்தனைவருஷத்தில் முடிவாகுமென்
றும் யோசிக்கிருேம். அப்படியோசிக்கும்பொழு
து மூன்றுவருஷகாலம்செல்லுமென்று சுமாராய்
தெரிந்துக் கொள்ளுகிருேம். அந்தக் கட்டடம்
கட்டி முடிவதற்குள் எத்தனைவேளை சாப்பிடப்
போகிருேம். எத்தனை இரவு நித்திரைசெய்கி
ருேம். எத்தனை தடவை சிரமபரிகாரம் செய்துக்
கொள்ளுகிருேம். இதைப்போலவே சீவர்கள்

பஞ்சபூத சம்பந்தமான தேகம் சலித்தவுடன் மரணமடைந்து தேகமிருக்கும்போது செய்த நல்லகாரியத்திற்குத் தகுந்தபடி சிரமபரிகாரத் திற்காக சொர்க்க சுகமடைந்து சிரமம் தீர்ந்த வுடன் மறுபடியும் ஜன்மமடைகிறுன் என்று அறியவேண்டும். சீவன் ஓய்வினிமித்தம் சிரம பரிகாரமடைவது யுக்தமே.

மகன்— இது எனக்கு விளங்கவில்லையே ?

தாய்—விளங்கும்படி தெரிவிக்கிறேன். இப்பொழுது மனிதன் ஒரே ஜன்மத்தில் உலகவிஷயமெல்லாம் அனுபவிக்கமுடியாது என்பது யாவருக்குந்தெ ரிந்த விஷயம். மேலும் எல்லாவிஷயமும் நன் ருய்த்தெரிந்துக்கொண்டவனை நாம் ஞானமுள் ளவனென்றும், அறிவுள்ளவனென்றும்சொல்லு கிருேம். அப்படிச் சொல்வதற்குக் காரணமெ ன்னவெனில் எல்லாம் தெரிந்துக்கொள்ள பல ஜென்மம் எடுக்கவேண்டுமென்றும், அப்படியெ டுத்து அனுபவித்தவனையே ஞானியென்றும் நாம் சொல்லுகிருேம். இதனுல் இந்தலோகத் தைவிட்டு சீவன் பிரிந்துபோகும்போது பாவபு ண்ணியத்துடனேபோய் ஓய்வினிமித்தம் சிரம பரிகாரம்செய்துகொண்டு பிற்பாடு மானசீகபூமி யைவிட்டு ஸ்தூலபூமிக்குத் திரும்பிவருகிறுன். இவ்விதம் பலதரம்போய் பலதடவை திரும்புகி ருன். அநேக ஜன்மங்களில் அனுபவ ஞானங் களினுல் தேர்ச்சியடைய புத்திமாஞகி

ருன். கடைசிகாலத்தில் சிலஜன்மம் பாக்கி யிருக்கும்பொழுது அவன் சுவர்க்காதிசுகங் களைவிரும்பாமல் ஒரேமூச்சாய் மோக்ஷத்திற்கு பிரயத்தினம்செய்கிறுன். இப்படிச்செய்கிறவன் மனது கொஞ்சமும் சலிக்காமல் மனோசக்தி ஜாஸ்தியாகவிருக்கும். இப்படி யிருக்குமனோவன் மையினாலும், புத்தி கூர்மையினாலும் பிரகிருதி மயக்கத்திற்கு உட்படாமல் உலகமுழுவதும் அனித்தியம் என்று அறிந்து சச்சிதானந்தசொரூபராகிய கடவுளிடத்தில் மனம் ஐக்கியமாய் ஆனந்த மடைந்துக்கொண்டிருப்பான். இதுவே மோட்சமென்று சொல்லப்படுகிறது.

மகன்—அம்மா எல்லா விஷயமு மனுபவிக்காமலே மோக்ஷமடைந்தாலென்ன?

தாய்—அதுமுடியாது. இதை வேண்டுமானால் நீ நன்றாய் சோதித்துப்பார்க்கலாம். எப்படியென்றால் ஒவ்வொருவரையும் தனித்தனியே உனக்கு எதில் ஆசையிருக்கிறதென்று கேள்விகேட்டால் ஒவ்வொருவரும் தனக்கு இன்னின்ன விஷயத்தில் ஆசையிருக்கிற தென்று சொல்லுவார்கள். அந்த ஆசை நிறைவேறுமுன் இறந்துபோனால் அதை நிறைவேற்றுக்கொள்ள பூமியில்வந்துபிறக்கவேண்டியது நியாயந்தான் என்று விளங்கவில்லையா? மேலும் சாதாரணமனிதனுக்கு அரசனாகவேண்டுமென்று ஆசையிருந்தால் அதேஜன்மத்தில் அரசனாக முடியுமா? முடியாதாகை

யால் இராஜபதவி அடைவதற்கான புண்ணிய கருமங்களை சாஸ்திரயுக்தமாகச் செய்துக்கொண்டேவந்து இறந்துபோய் அரசகுடும்பத்தில் ஜேஷ்டனுகைப்பிறந்து பட்டாபிஷேகம் செய்துக் கொண்டு அரசனுகவிருந்து அனுபவிப்பான். ஒருவனுக்கு எந்ததானியம் இஷ்டமோ அந்த ஜாதி விரையே நிலத்தில் விதைப்பான். பிறகு அதன் பலனுகிய தானியத்தை அறுத்து உபயோகித்துக் கொள்வதுபோல இவன் மனமென்னும் நிலத்தில் எவ்வித கருமமான விதையை விதைக்கிருனே அதன் பலனையே அனுபவிப்பான். அப்படி அனுபவிக்கவேண்டியது யுக்தமே. ஆகையால் நீ முக்கியமாய்த் தெரிந்துக் கொள்ளவேண்டிய தென்னவென்ருல், மனத்திலுதித்த இச்சைதான் மோக்ஷத்திற்கு பிரதிபந்தம் என்று மகான்களுடைய கிரந்தங்களிலிருந்து தெரிந்துக்கொள்ளுகிருேம். அந்த இச்சையை வரவொட்டாமல் எவன் தடுக்கிருனே அவனே மோக்ஷானந்தமடைய அதிகாரியாவான். சிருஷ்டி, திதி, சம்மாரம்செய்யும் கடவுள்தவிர, மற்ற முனீந்திரர் முதலர்க முன் ஜன்மங்களில் நன்ருயனுபவப்பட்டுதான் மெஞ்ஞானமடைந்திருக்கிருர்களென்று நாம் தெரிந்துக்கொள்ளவேண்டும். நம்மைவிட அவர்கள் முன் ஜன்மங்களில் கஷ்டப்பட் டிருப்பார்களென்று தோன்றுகிறது. நமக்காவது அவர்கள் அனுபவத்தினுல் எழுதப்பட்ட கிரந்தபுஸ்தகங்கள் சாதகமாயிரு

க்கிறது. அவர்களுக்கு அக்காலத்தில் அவ்வளவு கிரந்த புஸ்தகங்கள் கிடையாது. நாம் மகான் களின் கிருபையால் எல்லாம் தெரிந்துக் கொள் ளுகிறோம்.

மகன்—அறிவுள்ளவர்கள் மற்றவர்களை யெல்லாம் மோக்ஷமடையகடவுளை பிரார்த்திக்கக்கூடாதா?

தாய்—அப்படி செய்யக்கூடாது, ஏனென்றால் ஒரு வேலைக்கு அருகனல்ல வென்று தெரிந்தும் அவ னுக்கு அந்தவேலையைக் கொடுக்கும்படி நாம் சிபாரிசு செய்யமாட்டோம் அப்படிச்செய்வது யோக்கியமல்ல, ஆகையினால் வேலை தெரியாத வனுக்கு கற்றுக்கொடுக்க வேண்டும். அல்லது உபாத்தியாயரிடம் கற்றுக்கொடுக்கும்படி சிபா ரிசு செய்யவேண்டும். இதற்குமேல்ஒன்றும் செ ய்யமுடியாது. அதைப்போல தகுதியற்றவனை தகுதியாம்படிசெய்வதே தம்முடையகடமையெ ன்று மகான்கள் அறிந்திருப்பார்கள். மேலே கட்டிடவிஷயம் சொன்னேனல்லவா? அந்தக ட்டிடத்தை இங்கேமுடித்துவிடுவோம். கட்டி டத்தில் அநேகமாய் வேலைமுடிந்தவுடன் மணிக் கணக்கில் முடியக்கூடிய வேலை பாக்கியிருந்தால் ஒரே மூச்சாய் வேலையை முடித்துவிட்டு சாப் பாடு முதலிய வேலைகளுக்குத் திரும்புவார்கள். நாட்கணக்கு மாதக்கணக்கு இருக்கும் போது ஓய்வை யனுசரிக்காமல் இருக்கமுடியாது.

மகன்—ஆம் அம்மா நான்பாடம்படிக்கும் பொழுதும் எழுதும்பொழுதும் நீங்கள் ஸ்நானத்திற்காவது போஜனத்திற்காவது என்னை அழைத்தால் கொஞ்சம்பாக்கியிருந்தால் நான் வருகிறதில்லை அந்தக்கொஞ்சம் முடிந்தபிறகுதான் எழுந்திருப்பேன்.

தாய்-பார்த்தாயா? சிலஉத்தியோகஸ்தர்கூட எழுத்து வேலை கொஞ்சம் பாக்கியிருந்தால் அதை முடித்து விட்டுத்தான் எழுந்திருப்பார்கள். இதைப்போலவே இன்னும் பலபேர்கள் பலவிதமாய்ச் செய்துக்கொண் டிருப்பார்கள். மனிதர்களும் சொற்ப ஜன்மம் பாக்கியிருந்தால் அப்போது சுவர்க்காதிசுகமான ஓய்வைவிரும்பாமல்மோக்ஷத்திற்கு என்னென்ன பிரயததினம் செய்யவேண்டுமோஅதையெல்லாம்நிறைவேற்றிக்கொண்டு மெஞ்ஞானமடைந்து பகவான் திருவடியில் என்றென்றைக்கும் ஆனந்தமாயிருப்பான். அல்லது ஜீவகாருண்ய நிமித்தம் ஓர்மனிதசரீரமெடுத்துக் கொண்டு ஜனங்களைசன்மார்க்கத்திற் திருப்பமுயற்சிப்பார்கள் இப்படிபட்டவர்களை நாம் மகாசரிகளென்றுசொல்லுவோம்.

மகன்—சரீரமெடுத்துக் கொண்டால் துக்கமயமென்றும், மாயாசம்மந்தமென்றும் நினைக்கமாட்டார்களா?

தாய்—அவர்களுக்கு கன்மத்தினல் வரும் தண்டனையனுபவிக்கும் சரீரம் போலல்ல. ஜனோபகாரநிமி

த்தம் சரீரம் யெடுத்துக் கொள்ளப் படுகிறது. இராமகிருஷ்ணதிகள் யெடுத்துக்கொண்டசரீரம் போலவென்று நீ அறிந்துக் கொள்ளவேண்டும்.

மகன்—அம்மா! இதைக்குறித்து விஸ்தரித்துச் சொல்ல வேண்டும்.

தாய்—குற்றவாளிகளாகிய கைதிகள் தண்டனையடையும் பொருட்டு, ஜெயிலில் வைக்கப் படுகிறார்களல்லவா? அதேகைதிகளுடைய சௌகுரியத்தை கவனிக்கும் பொருட்டு, சர்க்கார்யுத்தியோகஸ்தர்கள் சிலசமயம் அந்தஜெயிலில் நுழைவார்கள். மேலும் அவர்களுக்கு வியாதி உண்டானல் அதை சொஸ்தமாக்கும் பொருட்டு, ஆஸ்பத்திரிசர்ஜனும் மேற்சொல்லிய ஜெயிலில்நுழைவார்கள். இப்படிமற்றவர்கள் சௌக்கியத்திற்காக மேற்சொன்ன ஜெயிலில்நுழைந்தால் இவர்களையும் குற்றவாளிகளென்று நாம் சொல்லக்கூடுமா? கூடாது. அப்படிப்போல மற்றவர்கள் நன்மையடையும்பொருட்டு சீவன்முத்திபெற்ற மகான்கள் ஓர் சரீரத்தை எடுத்துக்கொள்வார்கள். அதனல் அந்த சரீரம் கருமத்தால்வந்ததென்று நாம் நினைக்கக்கூடாது.

மகன்—அம்மா! இந்தவிஷயங்களையெல்லாம் தெரிந்துக்கொண்டேன். ஆனலும், இன்னும் சில சந்தேகமிருக்கிறது. அதென்ன வெனில், நீங்கள் பூர்வஜென்ம மிருக்கிறதென்று சொன்னீர்களே, எனக்குப் பூர்வஜென்மமிருந்தால் அப்பொழுது

நடந்த சமாசாரம் ஞாபகமிருக்க வேண்டுமே, அப்படி ஞாபகமில்லாததினுல் நம்பமுடியவில்லை. நம்பும்படியாக எனக்குத் தெரிவிக்கவேண்டும்.

தாய்—அதைக்குறித்தும் விவரிக்கிறேன். இந்தஜென் மத்திலேயே நடந்த சமாசாரங்கள் முழுவதை யும் ஒன்றுகூட மறவாமல் ஞாபகம்வைத்திருக்கி ருயோ?

மகன்—இல்லை அம்மா! முழுவதும் ஞாபகமில்லை. சில விஷயந்தான் ஞாபகமிருக்கிறது.

தாய்—பார்த்தாயா? இந்த ஜென்மத்திலேயே நடந்த சங்கதிகளை ஞாபகததில்வைக்க சக்தியில்லாதவ னுக்கு, பூர்வஜென்ம விருத்தாந்தம் எப்படி ஞா பகமிருக்கும்.

மகன்—ஞாபக மில்லாமல் போகிறதற்குக் காரண மென்ன?

தாய்—அதையும் தெரிவிக்கிறேன் கவனமாய்க்கேள். இதைககுறித்து வைத்திய சாஸ்திரிகள் நன்று ய்ப் பரிசோதித்து வெளியிட் டிருக்கிறார்கள் இருந்தாலும், இந்த சாஸ்திரத்தின் சார்பாயும், நம்முடைய சாஸ்திரயுக்தமாயும் என்னனுபவத் தில்கண்ட சில விஷயங்களைத் தெரிவிக்கிறேன். ஞாபகசக்தி குறைந்து போகிறவிதம் மூளையில் அழுக்கு ஜாஸ்தியாக யிருந்தால் குறைந்துபோ கும். நடந்த சமாசாரமுழுவதும் மூளையில்தான் பதிப்பிக்கப்பட் டிருக்கிறது. அதில் அழுக்கில்

லாமலிருந்தால் பதியப்பட்டசங்கதிகள் அப்படி யே விளங்கிக்கொண்டிருக்கும். அழுக்குஜாஸ்தி யானல் சங்கதிகள் மறைந்துபோகும். ஆனாலும் முற்றிலும் எடுபடாது.

மகன்—அம்மா எடுபடாதென்பதற்காதாரமென்ன?

தாய்—என்னவென்றால், மறைந்துபோனவிஷயங்களை நாம் நினைவுகூறும்பொழுது, அதாவது யோசிக் கும்பொழுது நம்தேகத்திலுள்ள இரத்தஓட்டம் அதிகவேகமாய் ஓடும். அப்படி ஓடும்பொழுது மூளையிலிருக்கும் சில அழுக்குகளை விலக்கும். உடனே அதில் பதியப்பட்ட விஷயம்தோன்றி ஞாபகம்வரும். மேலும், மனம் என்னும் கருவி அடிக்கடி அக்ஞானத்தில் லயப்படும். சுபாவமா கையால், அப்படி லயப்படும்பொழுது, மூளைக் குச்சரியானவேலை யிருக்கமாட்டாது. எப்பொ ழுது அதற்கு வேலையில்லையோ அப்பொழுதே துருப்பிடித்ததுபோலாகும்.

மகன்—அம்மா! மனம் அக்ஞானத்தில் லயப்படுவதெ ன்றால் என்ன? தாங்கள் எனக்கு இந்துமார்க்கத் தில்சொன்ன விஷயத்தில் மனம்லயப்பட்டு ஒன் றையும் சிந்திக்காமலிருந்தால் சந்தோஷமுண்டா கும் என்று தெரிவித்தீர்களே?

தாய்—மனம் அக்ஞானத்தில் லயப்படாமல் மெய்ஞா னத்தில் லயப்படும்படி அப்பியாசம்செய்ய வே ண்டுமென்றுசொன்னேன். மனம்தாழ்ந்தவிஷய ங்களில் அழுங்கிப்போனல், அதிகசோம்பேரித்

தனமும், தூக்கமு முண்டாகி அறியாமையினுல் ஞாபகசக்தி கொஞ்சம்கூட இருக்கமாட்டாது. அப்படிமக்குத்தனம் உள்ளவர்கள் யாதொரு சுகமும் அடையாம லிருப்பதை காம் பார்க்கிறோம். மேலும் மூளை துர்ப்பலமா யிருப்பதாலும் சமாசாரங்கள் அழுத்தமாய் பதியப்பட இடமிருக்காது.

மகன்—அம்மா! புத்தி என்னும் ஒருகருவி இருக்கிறதாகச் சொல்லுகிருர்களே அதின்வேலையென்ன?

தாய்—புத்தி என்னும் கருவி அதிசூட்சுமமானது. அதன்வேலை நிச்சயிக்கிறவேலை. ஆத்மா அதின் வழியாகத்தான் பிரகாசிக்கும். இதன் விஷயம் மனச்சாட்சி என்னும் ஒரு அத்தியாயத்தில்தெரிவிக்கிறேன். இப்பொழுது நீதெரிந்துக்கொள்ளவேண்டிய தென்னவெனில், மனம் என்னும் கருவி விஷயங்களைக் கற்பனைசெய்யும். புத்தி என்னும் கருவி விஷயங்களைப்பகுத்தறிந்து நிச்சயிக்கும். இந்த நிச்சயமான விஷயங்களும் நம்முடைய அனுபவமான விஷயங்களும் நம்மூளையில் பதியப்படும். இப்பொழுது விபரம்தெரிந்துகொண்டாயா?

மகன்—ஆம் தெரிந்துகொண்டேன். பூர்வ ஜென்ம விஷயம் தெரிந்துக்கொள்ள வேண்டுமே, அதற்கென்ன செய்கிறது?

தாய்—வருத்தமான சரீரத்திலுள்ளமூளை எவ்வளவுக்கெவ்வளவு அதிக சுத்தமாயும், கெட்டியாயுமிருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு நமக்கு இந்த ஜென்மத்தில் நடந்த விஷயங்கள் ஒன்றும் மறந்துபோகாமல் ஞாபகமிருக்கும். பூர்வஜென்மத்தில் நடந்த விஷயங்கள் அந்ததேகம் நசிக்கும் பொழுது மூளையும் நசித்துப்போகும். அப்படி நசித்துப்போனாலும் அந்த ஜென்மத்தில் நிச்சயித்திருந்த விஷயங்களும் அனுபவித்த விஷயங்களும், மனம், புத்தி என்னும் கருவிகளினால் சாரமாய் கிரகிக்கப்பட்டிருக்கும். இதை எப்படித் தெரிந்துக்கொள்வதென்றால், புத்திமான்என்று நினைக்கப்பட்டிருக்கும் ஒருவனிடத்தில் போய் அவர் இந்தஜென்மத்தில் கண்டும்கேட்டும் அனுபவியாத விஷயங்களைக்கேட்டுத் தெரிந்துக்கொள்ளும்பொருட்டு, யோசனைகேட்டால் அவர்கள் நன்றாய் யோசனைசெய்து நமக்குத் தெளிவாய்த் தெரிவிப்பார்கள். அப்பொழுது நாம் அவரை புத்திமான் என்று சொல்லுகிறோம். அப்படி சொல்வதற்கு பூர்வஜென்மத்தில் பழக்கப்பட்ட கருவிகள் அவரிடம் இல்லாமல்போனால் அப்படித்தெளிவாய்ச் சொல்லமுடியாது. அப்பொழுது நாம் அதை அனுபவத்தில் தெரிந்துக்கொள்ளுகிறோம். பிறகு அவனைக் கெட்டிக்காரனென்று சொல்லுகிறோம். அப்பேர்ப்பட்டவர்கள் பூர்வஜென்மத்தின் விருத்தாந்தத்தை வர்த்தமானத்தின் அனுபவத்தைக்கொண்டு நிச்சயித்திரு

ப்பார்கள். அதைக்குறித்த விஷயங்கள் நமக்கு வெளிப்படையாய்ச் சொல்லமாட்டார்கள். அப்படிச்சொன்னால் கேட்கிறவர்களுக்கு கிரஹிக்கும் சக்தி குறைவாகவிருப்பதால் பரிகாசம் செய்வார்கள். மேலும் அவனுக்குப் பைத்தியம் பிடித்ததென்றும், இவன் மகாகண்டுவிட்டானே வென்றும் கண்டபடிசொல்லுவார்கள். அதனால் மேற்சொன்ன புத்திமான்கள் விஷயங்களை வெளிவிட்டுச்சொல்லமாட்டார்கள். ஜனங்கள் பலஜென்மமெடுதது பூரணானுபவம் பெற்றபின்பு எல்லாஜென்மத்திலும் நடந்த விஷயங்கள் ஞாபகத்திற்குவருமென்று பெரியோர்கள் நிச்சயித்துச் சொல்லி யிருக்கிறார்கள். அரையும் குறையுமாயிருக்கிற ஞானிகளுக்கு, பூர்வஜென்மத்தில் நடந்த விஷயங்கள் ப்ரத்திட்சமாகத் தோன்றாமற் போனாலும், உத்தேசத்தினாலும்; அனுமானத்தினாலும் தெரிந்துக்கொள்வார்கள். வரப்போகிற ஜென்மத்திற்கும் சாதகமாயிருக்கும் விஷயங்களை நிச்சியம்செய்திருப்பார்கள் எல்லோருக்கும் ஒரேமாதிரியான சித்தவிருத்தி, மூளைசுத்தம், மனசுத்தம், புத்திதீட்சணியம் இவைகளிருக்கமாட்டாது. முந்தின ஜென்மத்தில்செய்த கற்பனைக்குத்தகுந்தபடி இவைகள் அமைக்கப்பட்டிருக்கும். நமக்கு ஞாபகசக்தி அதிகமாயிருக்கவேண்டுமென்று நினைத்தால், வர்த்தமானத்தில் நாம் அதற்குச் சிகிச்சைசெய்துக் கொள்ளலாம். எப்படியெனில், மூளையில் உள்ள அழுக்குகள்

வெளிப்படும் நிமித்தம் மூளை அழுக்குநீங்கும் பதார்த்தத்தைக்கொண்டு பேதிக்குவாங்கிக்கொள்ளலாம். மூளை துர்ப்பலமாயிருந்தால் அது பலப்படும்பொருட்டு மூளைபலம்படும் பதார்த்தத்தை ஆகாரத்தில்சேர்த்துச்சாப்பிடலாம். மேலும் மூளையும் மனமும் சுத்தமாகும்படி சாஸ்திரயுக்தமான பதார்த்தங்களை மந்திரபூர்வமாகபெற்றுக்கொள்ளலாம். இதன்விஷயமும் சொல்லுகிறேன். இதில் நம்பிக்கை வைக்கவேண்டும், அடிக்கடி துளசிதீர்த்தம் பரிசுத்தமானதென்று நம்பெரியோர்கள் சொல்லியிருப்பதால், நாம் சிரத்தையாக உள்ளுக்கு வாங்கிக்கொள்ளவேண்டும். அப்படியே சாலகிராம அபிஷேகதீர்த்தமும் பரிசுத்தமானது. பஞ்சகவியமும் சுத்தமானது. இதையெல்லாம் சிரத்தையாக உட்கொள்ளவேண்டும். அப்படி உட்கொண்டால் அநேகமாய் பாவ அழுக்குகளைநிக்கும். இதனால் மூளையும் மனமும் சுத்தமாயிருக்கிறதும் தவிர, புத்தியுல் தீட்சணியமாகும். மனோவியாபாரத்தினாலும், கடவுள் தியானத்தினாலும் சித்தத்திலுள்ள அழுக்குநீங்கும், இதில் சமுசியமில்லை.

மகன்—அம்மா! புனர்ஜன்ம விஷயங்கள் தெரிந்துகொண்டேன். தேகம்தான் இறந்துபோகிறதே, பிற்பாஜெனிக்கிறதுஎது?

தாய்—தேகத்திலுள்ள ஜீவனும், அந்தகரணங்களும், சூட்சும இந்திரியங்களும் நசிக்காமல் பாவபுண்ணியத்துடன்கூடி வேறொரு தேகத்தை கிரகிக்கிறதென்று சொல்லப்படுகிறது.

மகன்—மரணமடைந்தவர்களை நாம்மரணமடைந்தபின் பார்க்கக்கூடுமோ?

தாய்—மரணமடைந்தவர்களை நாம் மரணமடைந்தபின் பார்க்கலாம். ஆனால், அந்த ஜன்மத்தின் ஞாபகமில்லாமலே பார்ப்போம்.

மகன்—அதெப்படியம்மா! எனக்கு விளங்கவில்லையே?

தாய்—விபரமாய்ச் சொல்லுகிறேன். நானும் நீயும் இதற்கு முந்தின ஜென்மத்தில் மரணமடைந்து இந்தஜென்மமெடுத்திருக்கிறோமென்று நீயறியவேண்டும். நமக்கு ஒருவர்மேலொருவர் இப்பொழுது தாயும் பிள்ளையுமாய் அன்பாயிருக்கிறோம். முந்தினஜன்மத்து உறவு இல்லாவிட்டால் இவ்வளவு பட்சம்வரக் காரணமில்லை. ஆனால், நமக்கு முன்ஜென்மத்திலிருந்த உறவு இன்னதென்று ஞாபகமில்லை. மனம் நசிக்காமல் இருக்கிறபடியாலும், அன்பு மனத்தினாலுண்டாகிறபடியாலும், அப்படிப் பக்ஷமுண்டாகிறது. இன்னும் சில இடங்களில் நமக்குப் பூர்வஜென்மத்தில் சத்துருக்களா யிருந்தவர்கள் இறந்தபின் நமக்கு சொந்தக்காரராகத்தோன்றி நமக்குஇம்சை செய்வதுமுண்டு. மேலும், சில அந்நியஜனங்களை நாம் பார்த்தவுடனே பிரியமாய் சிநேகிக்கிறோம். அப்படி சிநேகிக்க வேண்டிய காரணமென்னவென்றால், பூர்வஜென்மத்திலேயே அவர்கள் நமக்கு சிநேகிதர்களென்று நாம் நினைக்கவேண்டும்.

நாம் இப்பொழுது முக்கியமாகத் தெரிந்துகொள்ளவேண்டியதென்னவென்றால், நம்முடைய முயற்சியே நமக்குப் பலன்கொடுக்கும். நாம் நல்லவிஷயங்களை முயற்சிக்கும்பொழுது பகவானைக்குறித்து அடிக்கடி ப்ரார்த்திக்கவேண்டும். நாம் இப்பொழுது அனுபவிக்கிறநன்மைதின்மைகள் முந்தின ஜன்மத்தில் செய்துகொண்ட வினையினால் வந்ததென் றறியவேண்டும். நாம் கஷ்டப்படும்பொழுது

இனி கெட்டகருமம் செய்யாமல் நல்ல கருமமே செய்து மேலும் மேலும் சுகமடைந்து, பிற்பாடு சாஸ்வதமானவாழ்வை அடையவேண்டுமென்று நினைக்கவேண்டும். ஜன்மங்களைப்பற்றிக் கூடியவரையில்தெரிந்துகொண்டாயா? இன்னுமிதை விஸ்தரித்துச் சொல்லவேண்டுமானால்வளரும். இன்றைக்கு இந்தவிஷயத்தைப்பற்றிச்சொன்னது போதுமென்றுநினைக்கிறேன். நேரமாகிவிட்டதால் நாம் சாப்பிடப்போவோம்.

மகன்—அம்மா! பரலோக விஷயமான சங்கதிகளைத்தெரிவித்தீர்கள். இகலோகத்தில் அடையவேண்டியசுகத்திற்காக என்னுடைய கடமைகளைப் போதிக்கவேண்டும்.

தாய்—அப்பா! இன்றைக்கு நாழியாய்விட்டது ஆனதால் அடுத்த வாரத்தில் சாவகாசமா யிருக்கும்பொழுது நீகேட்ட விஷயங்களை தெரிவிக்கிறேன்.

மகன்—சரி! அப்படியே செய்கிறேன்.



# கடமை.

---

## 4-வது, அத்தியாயம்.



மகன்—அம்மா! சான்திரசம்பந்தமான சிற்சில விஷயங்களை யும், கிரந்தங்கள் படிக்கவேண்டிய முறைமைகளையும் உங்கள் கிருபையினால் தெரிந்துகொண்டேன். ஆனாலும் இகலோகத்திலும், நான் சுகப்படவேண்டிய முறைமை களை தங்களிடம் தெரிந்துக்கொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

தாய்—அப்பா! இப்பொழுது எனக்குச் சாவகாசமாயிருக்கிற படியால், நீதெரிந்துக்கொள்ளவேண்டிய விஷயங்களைக் கூடியவரையிலும் தெரிவிக்கிறேன்.

மகன்—அப்படியானால், எனக்கு அதிகசந்தோஷம்: அம்மா! நான் ஒருநாள் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டிற்குத்திரு ம்பும்பொழுது, அங்கே ஓரிடத்தில் சிலர் கூட்டமாயிருந் தார்கள். அதென்னவென்று அங்கேபோய் கவனித் தேன். அங்கே ஒருவர் பிரசங்கம் செய்துக்கொண்டிரு ந்தார். அவர்கள் எதைக்குறித்து பிரசங்கம் செய்தார் களோ தெரியவில்லை. ஆனாலும், நான் கேட்கும்பொ ழுது சொன்ன சமாசாரம் எனக்குச் சந்தேகத்தைவிளை வித்தது. அதென்னவெனில், காலதேச வர்த்தமானத் திற்கிணங்க, அநேக சங்கதிகளைப் புரட்ட வேண்டுமெ ன்று, சாஸ்திரங்களிலுள்ள சிற்சில விஷயங்களையும் மா ற்றி எழுதவேண்டுமென்று சொன்னார் அதென்ன?

தாய்—அப்பா! இக்க விஷயத்திலும் சில உண்மையிருக்கிறது இதைக்குறித்து விவரிக்கிறேன். முற்காலத்தில் சாஸ்திர சட்டதிட்டங்கள் சரியாய் ஏற்பட்டிருந்தது அதைப் போலவே ஜனங்கள் நடந்துக்கொண்டு வந்தார்கள். அப்படிச்செய்துக்கொண்டுவந்ததில் அநேக ஜனங்கள் சுகப் பட்டுவந்தார்கள். வரவர சிலஜனங்கள் மாயாபிசாசுக்கு வசப்பட்டு, செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாமலிருந்ததும் தவிர, சட்டதிட்டங்களுக்கு விரோதமாயும் நடந்துவந்தார்கள்.

அதைப்போலவே, மற்ற ஜனங்களும் செய்யத் தலைப்பட்டார்கள். சரியாய் ஏற்பட்ட விஷயங்கள் புரண்டிருப்பதற்கு இதுவே காரணம். இப்பொழுது தற்காலத்தில் மறுபடியும் ஒரு டாட்டல் புரட்டவேண்டும். அப்படிச்செய்தால் சரியாயிருக்கும். அரசாங்கத்திலும் எவ்வளவோ சட்டதிட்டங்கள் செய்துக்கொண்டே வருகிறார்கள். அப்படிச் செய்தபோதிலும் பிரஜைகள் ஒற்றுமைக்குறைவினாலும், விபரீத ஆசையினாலும் நீதிமார்க்கங்களைத் துறந்துவிடுகிறார்கள்.

மகன்—மேலே தாங்கள் சொன்ன ஜன்மாந்திர விஷயத்தில் நாளாக நாளாக ஜனங்களுக்கு மனம் பக்குவப்பட்டுவருகிறதாகச் சொன்னீர்களே? இப்பொழுது விஷயங்கள் புரண் டிருக்கிறதாகச் சொன்னால் எனக்கு விளங்கவில்லையே?

தாய்—ஜனங்களில் மனம்பக்குவப்பட்டவர்களும், தற்காலத்தில் அநேகரிருக்கிறார்கள், அக்ஞான மதிகமாயிருப்பவர்களும் இருப்பார்கள். தற்காலம் எல்லாம் தெரிந்தவர்களுக்காக ஒன்றும் போதிக்கவேண்டியதில்லை. தெரியாதவர்கள் சீர் திருந்தி சுகமடையும்பொருட்டு கற்றறிந்த பெரியோர்கள் கவலையெடுத்துக்கொண்டு, பிரசங்கம்செ

ய்தும், பத்திரிகைகளுக்கு விஷயங்களெழுதியும், புஸ்த கங்களெழுதியும், இன்னும் இதைப்போன்ற பலவிதத் திலும் பாடுபட்டு ஜனங்களை முன்னுக்குக் கொண்டுவர பிரயாசைப்படுவார்கள். அப்படிச்செய்ய வேண்டியதும், அவர்களுடையகடமையென்று நாமறியவேண்டும். நீயும் நன்றாய்ப் படித்துப் பண்டிதனாகும்பொழுது, ஜனங்க ளுக்கு உபகாரமாகப் பாடுபடவேண்டும். அதுவும் உன் கடமை என்று தெரிந்துக்கொள்.

மகன்—அம்மா! நான் பண்டிதனாயிருந்தாலும் சரி, சாதாரண மாயிருந்தாலும் சரி, பணக்காரனாயிருந்தாலும்சரி, ஏழை யாயிருந்தாலும்சரி, நான் எந்த நிலைமையிலிருந்தபோதி லும் என்னால் கூடுமானவரையில் ஜனங்களுக்கு உபகா ரம் செய்ய கங்கணம் கட்டியிருக்கிறேன் இதுஉண்மை. தாங்கள் காலம் புரண்டிருக்கிறதென்று சொன்னீர்களே அதை எப்படி நான் சரியாய்ச்செய்து கொள்ளுகிறது.

தாய்—நாமேதான் இந்த விஷயத்தைச் சரியாகச் செய்துக் கொள்ளவேண்டும். அது முன்போலவே இருக்கவே ண்டுமானால், மனிதரெல்லாம் கூடியவரையில் கிரமமாய் உழைக்கவேண்டும். அப்படி உழைத்தால் மெள்ள மெள் ளப்புரண்டு வர்ணாசிரமமுறை வழுவாமல்நடக்க சாத்திய மாகும். அதனால் ஜனங்கள் சுகமடையலாம்.

மகன்—வருணாசிரம முறை என்றாலென்ன?

தாய்—வருணாசிரம முறையென்றால் மனிதர் ஜாதிக்குத்தகுந் தக் கடமையை நிறைவேற்றும்வழி. அது ஆண்களுக்கு ஒருமாதிரியாகவும், பெண்களுக்கு ஒருமாதிரியாகவும், இன்னும் இதரஜாதிகளுக்கு தகுந்தபடியாயும் பிரித்திரு க்கும். இதைக்குறித்து நீ விபரம் தெரிந்துக் கொள்ள வேண்டுமானால் நம்முடைய தர்மசாஸ்திரம் படித்தால்

நன்ருய் தெரிந்துகொள்ளலாம். மேலும், தற்காலத்தில் படித்தவர்களில் சிலர் ஜாதிபேதம்கூடாதென்றும், இன்னும் இதைச்சார்ந்த பலவிஷயங்களையுங்குறித்து சாஸ்திரவிரோதமாகப் பிரசங்கம்செய்கிருர்கள். இங்கிலீஷ்காரர்போலவே இருக்கவேண்டுமென்றும், சிலருடைய அபிப்பிராயம். மேலும், சிலர் வைதீகர்களைக்கண்டால் அவமதித்துக் கேவலம் செய்கிருர்கள். இந்த விஷயத்தில் என்னுடைய அபிப்பிராயப்படி உனக்குச்சிலசங்கதிகள்சொல்ல கடமைபட்டிருக்கிறேன். மற்றவர்களைவிட உனக்கு நான் போதிக்கவேண்டிய அவசியமிருக்கிறபடியால் சொல்லுகிறேன். நீ சாஸ்திரப்படிக்கே சாத்தியமானவரைக்கும் கடமைகள் நிறைவேற்ற வேண்டும். நீ இப்பொழுது பாலனுனபடியால், விளையாட்டிலும், பள்ளிக்கூடப்படிப்பிலும் காலம் செலவழியும். அப்படிக்காலம் செலவுசெய்வதும் யுக்தமே. இன்னும் கொஞ்சகாலம்போனல் சரியானவயதுவந்து பலவிஷயமும் கவனிக்கும்படி ஏற்படும். அதற்குச் சாதகமாக சிலவிஷயங்கள் சொல்லுகிறேன்.

முதலாவது உனக்குப் படிப்பு முடிந்தவுடன், ஒரு உத்தியோகத் தொழிலோ, விவசாயமோ, வியாபாரமோ, ஏதாவது ஒரு தொழிலைக் கைக்கொள்வாய். அப்பொழுது உன்மனைவியிடத்தில் ஏற்றத்தாழ்ச்சியான குணங்களைக் கண்டால் அதை உபாயத்தினுலும் தந்திரத்தினுலும் உன் மனதின்படி திருத்திக்கொள்ள வேண்டும். ஒரு வேளை உன் அதிர்ஷ்ட விசேஷத்தினுல் உன்னை விட சாமர்த்தியமும் புத்தியுள்ளவளுமாயிருந்தால் அவள் யோஜனைப்படியும் நடந்து சுகமடையலாம். அவள் மனம் நோகும்படி நீ செய்யக்கூடாது. அதனுல் இகலோக சுகங்கள் ஜாஸ்தியாகவேயிருக்கும் மேலும் உனக்குக் குழந்தைகள்

பிறந்தால் அவர்களையும் சரியாகத்திருத்திவளர்த்து படி ப்பெல்லாம் சொல்லிவைத்து பண்டிதனுக்க வேண்டிய தும் உன் கடமையே. உன்வேலைக்காரரையும் சரியாய் நடத்தவேண்டும். சிநேகிதர்களிடத்திலும் பிரியமாயிரு க்கவேண்டும் எப்பொழுதும் சிநேகிதனை முகஸ்துதி யாகப் பேசாதே. அப்படிப்பேசினால் அது அவர்களுக்கு விரோதமாய்த் தோன்றும்.

வைதீகபிராமணர்களைக்கண்டால் அவமரியாதை செய்யாதே. அப்படிச்செய்தால் பாவம் வருமென்று நினைத்து மரியா தையாகயிருக்கவேண்டும். ஏனெனில் அவர்கள் வஸ்தி ரம் பெரும்பாலும் வெள்ளையாயிருக்கிற தில்லை. மே லும், ஏழைவைதீகபிராமணர்கள் ஆதிகாலத்திலிருந்தே உத்தியோகஸ்தரையே அண்டிப்பிழைப்பார்கள். அப்படி பிழைத்தபோதிலும் அவர்களிடத்தில் மகிமைகள் அதிக மாயிருக்கும். அது தெரியாமல் உன்னைப்போன்ற பா லர்களும், யௌவனப்பையன்களும், சில உத்தியோகஸ் தர்களும், தங்களுக்குத் தெரிந்த இங்லீஸ் படிப்பு அவர் களுக்குத் தெரியவில்லை யென்றும், வெள்ளையாயிருக் கும் சட்டைகளை அணியவில்லை யென்றும், சுயபாஷை யில் இங்லீஸ் வார்த்தையைக்கலந்து உச்சரிக்க வில்லை யென்றும், கேவலமாக நினைத்து பரிகாசம் செய்கிறார் கள். நீ அப்படிச்செய்யாமல் பிராமணர்களிடத்தில் மரி யாதையாக யிருக்கவேண்டும். எப்பொழுதும். எக்கால த்திலும் ஒருவரையுமே அவமதிக்கக் கூடாது. உன்னை மாத்திரம் பிறர் அவமதித்தால் உனக்கெவ்வளவு கோபம் வரும்? அப்படிப்போல நாமும் பிறரை தூஷித்தால் அவர் களுக்கும் கோபம் வருமல்லவா! அதனால் ஒருவரையும் எப்பொழுதும் தூஷிக்கக் கூடாது.

ஆனால் நமக்கு அடிக்கடி இடஞ்சல் செய்கிறவர்களை இனி இடஞ்சல் செய்யாமலிருக்கும்படி கண்டிப்பாய்ச்சொல்லவேண்டும். ஏனெனில், நாம் பொருமையாயிருந்தால் மேலும் மேலும் நமக்குக் கெடுதலே செய்துக்கொண்டிருப்பார்கள். இதற்கு ஒரு திருஷ்டாந்தம்சொல்லுகிறேன். நம் முன்னோர்களாகிய மகான்கள் முதலாய் அதிகசாந்தமுள்ளவர்களானாலும் தவமுள்ளவர்களானாலும், தங்களை அவமதித்தவர்களையும் தங்களுக்கிடஞ்சல் செய்பவர்களையும், சாந்தத்தை யொழித்து சாபமிட்டிருக்கிறார்கள். சாபமடைந்தவர்கள், மகானுபாவர்களாகிய அவர்களுடைய காலில் விழுந்து மன்னிப்பு கேட்டால் கொஞ்சகாலம் தங்கள்வாக்குப்பொய்யாகாமல் சாபமனுபவித்துப் பின்னால் சவுக்கியம் அடையும்படி அனுக்கிரகம் செய்வார்கள். ஆகையினால் பெரியோர் முதலாய் அப்படியிருக்கும்பொழுது, சாதாரணமான நாம் எப்படிப்பொருமையாயிருக்க முடியும்? முடியாது. அதனால் முதலில் ஒருவர் வழிக்கும் போகாதே, இடஞ்சல் செய்யாதே. கூடுமானால், மனத்தாலும், வாக்கினாலும், சரீரத்தினாலும், பணத்தாலும் உபகாரம் செய்யலாமே தவிர நம்மை ஒருவர் கேவலமாகப்பேசினாலும், நமக்கு சதாயிடஞ்சல் செய்தாலும், நாம் பொருத்திருக்கவேண்டுமென்று அவ்வளவு அவசியமல்ல அப்படிச்சாத்தியப்படவும் மாட்டாது.

சாத்தியமாயிருக்கிறதற்கு பூரண ஞானமுள்ளவர்களாகிய துரவிகள் இப்பிரபஞ்சம் பொய்யென்று வெறுத்து, அதில் பற்றுதல் யில்லாமல் இருப்பதால் ஒரு வேளை அவர்களுக்கு பொருமையுள்ள குணம் யிருக்கும். நம்மைப்போல் சாதாரணமான மனிதர்களுக்கு அது முடியாதாகையால் கௌரவமாக யிருக்கும்மனிதர்கள் மானம் போய்விடாம

லிருக்கும்படி செய்துக்கொள்வார்கள். அதுசரியே நீ வைதீகர்களைக் கண்டால் உடனே மரியாதையாக ஆசனம் கொடுத்து இன்சொல்பேசவேண்டும். நான் ஒரு நாள் என் சிநேகிதி வீட்டிற்குப் போயிருந்தேன். அவள் புருஷன் ஓர் சர்க்கார் உத்தியோகஸ்தன் அவர் நாற்காலியிற் உட்கார்ந்துக் கொண்டிருந்தார். வீட்டுப்புரோகித பிராமணன் கையைச் சேர்த்துவைத்துப் பயபக்தியாய் நின்றுக்கொண்டிருந்தார். அதைப்பார்த்த உடனே எனக்கதிக வருத்தமாகயிருந்தது. பிற்பாடு என்தோழியிடத்தில் இதைக்குறித்துப் பேசும்பொழுது அவள், "நானென்னசெய்யக்கூடும்? இந்த இங்லீஷ்ப்படிப்பினால் அநேகமாய் அநேகர் வீட்டில் இப்படித்தான்நடக்கிறது. இதைக்குறித்து நீ அதிசயப்படுவதென்ன? மேலும் நான் சொன்னால் என் புருஷன் சண்டைசெய்வார்,, என்று சொல்லிவிட்டாள். பிறகு நான். உன்புருஷனை நீ கூடியமட்டும் இந்த விஷயத்தில், அவர் சந்தோஷமாயிருக்கும் சமயத்தில், திருத்தவேண்டும். அது உன்னுடைய கடமை என்று சொல்லிவிட்டு, வீட்டுக்குத் திரும்பினேன். ஆகையினால் பிராமணர்களை அவமதிக்காமல் இன்சொல்சொல்லி யனுப்பவேண்டும், அதுவும் உன் கடமைதான் கூன், குருடு, செவிடு, ஏழைகளுக்கும் முகமலர்ந்து கூடிய வரையிலும் தர்மத்தை யுத்தேசித்து அவர்களைப் பரிகாசம் செய்யாமல் தன்னால் இயன்றதைக்கொடுத்துதவவேண்டும். மேலும் அந்நிய மதக்காரர்கள் உனக்குயாதொரு இடைஞ்சலும்கொடுமையும் செய்யாதிருக்கும் பொழுது அவர்களை துவேஷிக்காமல் சகோதரர்களைப் போல் நினைத்து பட்சம் பாராட்ட வேண்டும். இதுவும் உன் கடமைதான்.

இன்னும் பந்துக்கள். சுற்றத்தார்கள் இதர ஜாதிகளிலுள்ள மனிதர்கள் யாவரையும் சமயோசிதபுத்தியினால் அவரவர்

களுக்குத்தகுந்தபடி நாம் சிநேகிக்கவேண்டும். இப்படிச் செய்துக்கொண்டுவந்தால் நம்முடையமனச்சாட்சி பின்னுக்கு நம்மை வாதிக்காமலிருக்கும். நாம் எப்பொழுதும் சந்தோஷமாகவேயிருக்கலாம். நாம் செய்யும் நற்காரியங்களை தெய்வபிரமாணத்திற்கு உட்படுத்தி பலன் வேண்டுமென் றபேட்சியாமல் செய்து வந்தால் ஞானமும் அதிகமாகும். எல்லாவற்றிற்கும் அனுகூலம் தன்னைப்போலவே பிறரையும் எண்ணவேண்டும். இது நியாயந்தான். நாம் சிநேகிதர் வீட்டிற்காவது உறமுறையார் வீட்டிற்காவது போனல் நமக்கு ஆசனம்கொடாமலும், நம்முடன் முகங்கொடுத்துப் பேசாமலும், அலட்சியமாயிருந்தாலும் நாம் மனதுக்குள் அதிக வருத்தப்பட்டு இனிமேல் இப்பேற்பட்ட இடத்திற்கு வரக்கூடாதென்று நாம் நினைப்போம். நம்முடைய வீட்டிற்குப் பிறர் வந்தால் நாம் ஆசனம் கொடாமலும், அவர்களுடன் இன்சொற்பேசாமலு மிருந்தால் அவர்களும் வருத்தப்படுவார்களல்லவா? ஆனல் எப்பொழுதும் ஜாக்கிரதையாகயிருந்து மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

தன்னைவிடபிறர் தாழ்ந்த குணமுள்ளவர்களென்று தோன்றினல் அவர்களுடைய சிநேகிததனதை அறவே ஒழித்துவிட வேண்டும். மேலும் இதரதேசத்தார்களையும் நாம் சிநேகம் செய்யலாம் அப்படிச்செய்வதில் அவர்களுடைய நற்குணங்களை நாமெடுத்துக் கொள்வதிலும் சகோதரபான்மை விருத்தியாகும். அதினலும் நமக்கு சந்தோஷமே.

நீ பள்ளிக்கூடப் படிப்பு முடிந்தவுடன் ஓர் தொழிலைக்கொள்வாயென்றுச்சொன்னேனல்லவா? அதில் உன் அதிர்ஷ்ட விசேஷத்தினல் சர்க்காரில் தகுந்த வேலையைக் கைக்கொள்ளும் பொழுது, இன்னின்ன விதமாய் வேலைகள் செய்ய வேண்டு மன்று ஒழுக்கமான தீர்மானம் செய்யவேண்டும். அப்படித்தீர்மானித்தபிறகு அந்த உத்தியோகத்தில் லாபநஷ்டம் உண்டானலும், சரீரத்துக்கு சிரமம் உண்டானலும், நாம் ஏற்படுத்திக்கொண்ட தீர்மானத்திற்கு விரோதமான செய்கை செய்யக்கூடாது. கூடுமான வரைக்கும் நன்மையே செய்யவேண்டும். ராஜத்துரோகம் செய்தால் இகலோகத்திலும் பரலோகத்திலும் துன்பமே யடைவான். இதைக்குறித்தும் நம்

முடைய கிரந்தங்களில் விவரித்து சொல்லியிருக்கிறது. விபரமென்னவென்றால், இகலோகத்திற் சுகமடையவேண்டுமானால், ராஜா சட்டத்திற்குக் கீழ்ப்படவேண்டும். பரலோகத்தில் சுகமடைய வேண்டுமானால் தெய்வசட்டத்திற்குக் கீழ்ப்படியவேண்டும். இந்தஇரண்டு சட்டத்திற்கும் அதிக வித்தியாசம் இல்லாததினால் இரண்டு சட்டத்திற்கும் கீழ்ப்பட்டவன் இகலோகத்திலும், பரலோகத்திலும், எக்காலத்திலும், சுகமேயடைவான். இதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை ராஜத்துரோகம் செய்தவன், பலர் முன்னிலையிலும் தண்டிக்கப்படுவான் அதனால் அவனுக்குப் கௌரவம்போய்விடும். அப்படிக் கௌரவம் போய்விட்ட பிற்பாடு மிருகத்திற்குச்சமானமென்றெண்ணுவார்களே தவிர மனிதனென்று எண்ண மாட்டார்கள்.

மகன்—சரி அம்மா! அவன் இகலோகத்தில் அவமானமடைந்தாலும், பரலோகத்தில் அவனை என்ன செய்வார்கள்.

தாய்—பரலோகத்தில் நன்றிகெட்டவன் அடையக் கூடிய தண்டனையே இவனும் அடைவான்,

மகன்—அதெப்படி இவன் நன்றிகெட்டவனாவான். எனக்கு விளங்கும்படி சொல்லவேண்டும்?

தாய்—அரசனென்றால் தேசத்திற்கதிபதி. சக்ரவர்த்தியென்றால் அநேக தேசத்திற்கதிபதி. இப்படி அதிபதியாயிருக்கிற அரசனுக்கு பூமியிலுள்ள எல்லாபதார்த்தமும் அவனுக்கே உரியவையென்றுவிளங்கவில்லையா? அரசனுடைய பூமியிலேயே தானியம்பயிர் செய்து சாப்பிடுகிறோம். அவனுடைய எல்லையிலேயே நித்திரைசெய்கிறோம். இப்படி பூலோகத்தில் அனுபவிக்கவேண்டியவையெல்லாம் அரசனுடையஎல்லையிலேயே அனுபவிக்கிறோம். இப்படியிருக்கும் பொழுது உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்வதுபோல அரசனுக்குத்துரோகம்செய்தால் அதுதெய்வசம்மதமாகுமா? நம்முடையமனச்சாட்சிதான்ஒப்புமா?ஒப்பாது. அதனால் இராஜாங்கத்திற்குநன்மைசெய்யவேண்டு

மானல், கூடியவரையில் செய்யலாம். முடியாமற் போனல் துரோகம் செய்யக்கூடாது. துரோகம்செய்யாமல் பொதுவாக நன்றியறிதலுள்ளவர்களாகவே யிருக்கவேண்டும். நாம் அடிக்கடி நன்மைசெய்தவர்களுக்கு நன்றிபாராட்டினல் நம்மைப்பாவதோஷங்கள் அணுகமாட்டாது. அதனல் இருக்கஇருக்க ஞானமதிகமாகி நல்லபலனையே அனுபவிக்கலாம். இப்படிச்செய்யாமல் பாவதோஷங்கள் அணுகும்படி செய்துகொண்டால் அது நம்மை மேல் நிலைமையிலிருந்து கீழ் நிலைமையில்வந்து விட்டுவிடும். ஆகையினல் நீஇதை நன்ருய் ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

மகன்—அம்மா! அரசனுடைய எல்லையில் நாமிருந்தால், தகுந்தபடி வரிசெலுத்துகிருேமல்லவா? அப்படியிருக்கப் பாவம் எப்படியுண்டாகும்?

தாய்—நீ சிறுவனனதால் அறியாமல் சொல்லுகிருய் அன்னையாகிய நான் உன்னைப் போஷித்திருக்கும்பொழுது, பணத்தாலாவது சரீரத்தாலாவது சில உபகாரஞ்செய்துவிட்டு பிறகு எனக்கு நீ துரோகம் செய்யக்கூடுமா? கூடாது இதைப்போலவே இராஜாங்கத்திற்கும் வரிசெலுத்திவிட்டு பிறகு துரோகம் செய்யக்கூடுமா? கூடாது நாம் மேலே சொன்னபிரகாரம் உயிருள்ளவரைக்கும் நன்மையே செய்யவேண்டும். மறுஜென்மம் வந்தாலும் இந்த வாசனையே ஒட்டிக்கொள்வதால், அப்பொழுதும் நன்மையே செய்யும்படியாயிருக்கும். நமக்குபெரிய உத்தியோகம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று, கர்வத்தினலும், அகம்பாவத்தினலும் பிறரை இம்சிக்காமலிருக்கவேண்டும். குற்றவாளிகள் குற்றம் செய்தாரென்று தெரிந்து கொண்டபின் சட்டபடி நன்ருய்சிட்சிக்கவேண்டும். குற்றவாளிகளை சட்டப்படி சிட்சிக்காமல் விட்டு விட்டால், அரசனையே அவமதித்ததாகும். தற்காலத்தில்கூட நாம்பத்திரிகைவாயிலாக சில உத்தியோகஸ்தர் லஞ்சம் வாங்கிக்கொண்டு சட்டங்களைபுரட்டிவிடுகிருர்களென் றறிகிருேம்.

தகுந்த உத்தியோகஸ்தர்கள் இப்படி விவேகமில்லாமல் செய்கிறபடியால் மேலதிகாரிகள் இவர்களை உத்தியோகத்தைக் காலிசெய்யும்படி உத்தரவு பிறப்பிப்பார்கள். அந்த உத்திரவைப்பார்த்து மனதில்விசனப்பட்டுக்கொண்டுபோய் விட்டார்களென்றும், மேலும் சிலர் விசாரணையிலிருக்கிறார் என்றும், அடிக்கடி நாம் தினசரிப்பத்திரிகையில்படிக்கிறோம். நீஇப்படிபுத்திக்ஈனமான வேலைகளைச்செய்யாதே, அப்படிச்செய்தால் பாவமும் பழியுமொட்டும். அதனால் அதிகபேராசையினால் ஜனங்கள் ஆபத்துக்குள்ளானதுபோல நாமும் ஆபத்துக்குள்ளாகும்படிநேரிடும் அதனால்நாம்எப்பொழுதும் ஜாக்கிரதையாகவும்ஒழுங்காயுமிருக்கவேண்டும்

மகன்—யாரம்மா அப்படி ஆபத்துக்குள்ளானது? அதை எனக்குக் கொஞ்சம் சொல்லவேண்டும்.

தாய்—தற்கால சங்கதி உனக்குக் கூடியவரையில் தெரிந்திருக்கிறது. அதைக்குறித்து இங்கேசொல்வானேன் நம் முன்னோர்களுடைய கதையில்சிலதை விவரிக்கிறேன் அதிகவல்லமையினால் உலகமெல்லாம் ஆண்டுவேந்தராவணன் ஓர் ஸ்திரியின் மேல் ஆசைவைத்ததினால் பந்துமித்திரர்களுடன் படுகளத்தில் படுகூரணமானான் துற்புத்தியுள்ள துரியோதனன் பங்காளிசொத்தைக் கொடாத லோபத்தினால் தன் சுற்றத்தார்களுடன் மாண்டுபோனான் பின்னும் இரண்யாட்சன், சூரபதுமன் முதலியவர்கள், அகம்பாவத்தினாலும் அகங்காரத்தினாலும் தன்னைவிடப்பெரியவர் இல்லையென்று இறுமாப்படைந்து காட்டில் தவசுசெய்யும் ரிஷிகளுக்கும் முனிகளுக்கும் ஜனங்களுக்கும் இம்சைசெய்து கொண்டு வந்ததினால் கடவுளால்நன்றாய்சிட்சையடைந்தார்கள் மேலும் தசரதச்சக்கரவர்த்தி மோகத்தினால் உயிரைவிட்டான்.

மகன்—அம்மா! மரணமடைகிறது சுபாவம்தானே அதைசிட்சையென்று சொல்லலாமா?

தாய்—அப்பா! பஞ்சபூதசரீரமானது சலித்துப்போனால் ஒய்வினிமித்தியம் மரணமடைகிறது சுபாவமென்று சொன்னேன் இவர்களெல்லாம், மேற்சொன்ன குற்றங்கள் செய்யாமலிருந்தால், இன்னும் வெகுகாலம் வாழ்ந்துகொண்டிருப்பார்கள் உக்கிரமான தவம் செய்து வரம் பெற்றவர்கள், வஜ்ஜிரசரீர முள்ளவர்கள் குற்றங்கள் செய்தபடியால் ராச்யபோகங்கள் அனுபவியாமல் விட்டு நாசமடைந்தார்கள். ராஜாதிராஜர்களாகிய இவர்களுக்கே இவ்வளவு ஆபத்துக்கள் வந்திருக்கும்பொழுது சாதாரணமான நமக்குபலதுற்குணமிருந்தால் நாமெப்படி சுகமடைவோம்? ஆகையில் துற்குணங்களை விட்டு நற்குணமடைந்து நாம் சுகமடைய வேண்டும். இப்பொழுதும் இவ்விடங்களில் கொலை முதலிய குற்றங்கள்செய்து அரசாட்சியாரிடம் கொலைத்தீர்ப்பு பெற்றவன், சரீரம் சலித்துப்போனதினால் மரணமடைந்தவனல்ல அவனுக்குஅங்கேயும் சுகப்படும் பொருட்டு மானசபூமிகொடுக்கப்படமாட்டாது. யாதனுசரீரத்தால் அந்தகுற்றத்திற்கேற்பட்டகாலம் வரையிலும் நரகதுன்பத்தை யனுபவித்து மறுபடியும் மனிதனாகத்தோன்றுவான். அதனால்தான் எல்லாமதங்களிலும் கொலை முதலிய குற்றங்கள் செய்யக்கூடாதென்று நமக்குத் தெரியும்படிக் கண்டிப்பாயெழுதியிருக்கிறார்கள்.

மகன்—அம்மா! நீங்கள் சொல்லும் விஷயம் சரியாயிருந்தபோதிலும் எனக்குச் சில சந்தேகமிருக்கிறது. அதையும் தெரிவிக்கவேண்டும். கொலை முதலிய குற்றங்கள் செய்யக் கூடாதென்று எல்லா மதநூலிலும் சொல்வதாகச் சொன்னதும் தவிர, ராஜாங்கசட்டத்திலும் கொலைசெய்தவன் தண்டிக்கப்படுவானென்று சொன்னீர்கள். அரசாங்கத்தில் பிரஜைகளுக்கு உத்திரவிட்டபிரகாரம் அரசர்களெங்கே அப்படிச்செய்கிறார்கள். அவர்கள் மட்டும் ஏராளமான கொலை செய்கிறார்களே ஏன்?

தாய்—எப்பொழுது எந்த அரசர்கள் கொலே செய்வதாகக் கேள்விபட்டாய்.

மகன்—கேள்விப்படுவானேன், அரசர்கள்யுத்தமென்று பெயர்வைத்துக்கொண்டு அநேகம்பேர்களைகொலேசெய்து விடுகிறார்களே அது கொலேதோஷமல்லவா;

தாய்—நீ அறியாதவனைபடியால் அப்படி நினைக்கிறாய் அது உண்மையில் தோஷமல்ல ஏனெனில், அரசனுக்கு பிரஜைகளைக் காப்பாற்றுவதால், காவலன் என்று ஒருபெயருண்டு,அந்நியதேசராஜாங்கத்தார்சண்டைக்காகப் படைஎடுத்துக்கொண்டு வந்தால் பிரஜைகளைக்காப்பாற்றும் நிமித்தியம்அரசன் அவர்களை சண்டை செய்து துரத்துவது யுக்தமேதவிர அது பாவமல்ல, மேலும் உண்டவீட்டிற்கு இரண்டகம் நினைக்காமல் ஜனங்களும்யுத்த முனையில் அரசனுக்குத்துணையாக நின்று சண்டைசெய்ய வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் பாவம்வரும்.

மகன்—அம்மா! நீங்கள்மேலே கொலேசெய்தவனுக்கு மானசபூமியாகிய சொர்க்க சுகம்கொடுக்கப்பட மாட்டாதென்றுசொன்னீர்களே, இப்பொழுது அரசனுக்குத்துணையாக சண்டைசெய்யப்போகும் பொழுது எதிரிகளைக் கொலேசெய்யும்படி நேரிடுமே அவனுக்கு மானசபூமியாகிய சுகம் எப்படிக் கொடுக்கப்படும்.

தாய்—இதில் சூட்சுமமான விஷயங்களடங்கியிருக்கிறபடியால் அதையும் கூடியவரையில் விவரிக்கிறேன் யுத்தமில்லாமல் சாதாரணமான ஜனங்கள், பொறுமை முதலியதுற்குணத்தினால், கொலேசெய்யும் பொழுது, கொலேசெய்கிறவன் கோபமாகிய அகங்காரத்தில் லயப்பட்டிருப்பான். அதனால் அவனுக்கு அகங்காரத்திற்காக ஏற்பட்ட நரக துன்பமும கொடுக்கவேண்டும். அதுதான்யுக்தம். யுத்தத்தில் கொலேசெய்கிறவன் அரசனுக்காகத் துணைநின்று சண்டைசெய்கிறோமென்ற சந்தோஷத்தாலும் அரசன்கட்டளைக்குக் கீழ்ப்பட்டு நடக்கிறோம் என்ற எண்ணத்தினாலும் நாம்சண்டை

செய்து கெலிப்படைந்தால் இவன் வீராதிவீரனென்று எல்லோரும் புகழவேண்டியதற்காகவும், அரசாட்சியாரிடம் மெடல்பெறலாம் என்ற ஆசையினாலும், அப்படியேயிறந்துபோனால் இவன் உயிரைத்திரணமாக மதித்து, யுத்தத்தில் யிறந்துபோனானென்று வெகுநாள் கீர்த்தியடையலாம் என்றஎண்ணத்தினால் சண்டை செய்வான். அப்படிச்சண்டை செய்யும்பொழுது, அவன் மனமும் முகமும் மலர்ந்து, மிதமிஞ்சின சந்தோஷத்தினால் அவன் தூலதேகமாகிய பூமியிலில்லாமல் சந்தோஷசாகரமாகியமானசபூமியில்லயித்திருப்பான். இந்தசமயத்தில் எதிரியினால் விடப்பட்டகுண்டு ஆயுதமுதலியவை இவன்மேன்தாக்கி, அதனாலுண்டான காயத்தினால் இவனுக்கு இம்சையும்உபாதையும் தோன்றமாட்டாது. ஆகையினால் அவன் சண்டையில் கெலித்தால் வீரனென்று புகழுவான். தோற்றாலும் அந்த பூமியிலேயே மரணமடைவான். அப்படிமரணமடைந்தவுடன், வீரசொர்க்கமாகிய மானசபூமியில்லயிக்கப்படுவான். எதினாலென்றால் அரசனுக்காக உயிர்விட்ட புண்ணியமும், யோகிகள் முதலாய் மனதை நிறுத்த சக்தியில்லாமல் வெகுநாள் அப்பியாசம் செய்து மனது ஒரு தன்மையாகும்படி பழக்கம்செய்வார்கள் அப்பேற்பட்டமனது யுத்தகளத்தில் இந்த வீரனுக்கு ஒருதன்மையாய் லயமடைந்து இருக்கும்பொழுது சந்தோஷமாய் மரணமடைந் திருப்பதால் அவனுக்கு அதன் பலனாகிய மானசபூமிகொடுக்கப்படவேண்டியது நியாயந்தானே இதைக்குறித்து நீ சந்தேகம் கொள்ளவேண்டியதில்லை. மேலும், அரசனிடத்தில்அஷ்டலக்ஷிமியும்வாசமாயிருப்பதால் யுத்தத்தில்நடந்தகொலைபாதகம் அரசனையும் பிரஜைகளையும் அணுகாமல் ஜயலக்ஷிமியும் வீரலக்ஷிமியும் ஏற்றுக்கொள்வார்களென்று சாஸ்திரமிருக்கிறது நமமுடைய கதைகளில் முன்னோர்களாகிய ஞானவந்தாள் முதலாய் எல்லாரும் அரசனுக்காக யுத்தகளத்தில் மடிந்ததை உனக்கு எத்தனையோ தடவை விபரமாகச் சொல்லியிருக்கிறேன்.

உனக்கு ஞாபகமில்லாவிட்டால் பாரதம் ராமாயணம் முதலிய புஸ்தகங்கள்படித்தால் நன்ருய் எல்லாவிபரமும் தெரிந்துக்கொள்ளலாம். வீரனுக்கு உயிர் பெரிதல்ல, அவன் புகழுடையும் நிமித்தியம்உயிரைக் கொடுக்கத்தயாராயிருப்பான். நம் இந்துதேசமும் சிரிஷ்டி காலம் தொடர்ந்து இப்பேறபட்ட வீரராவர் பிள்ளைகளை கணக்கில்லாமல்பெற்று கீர்த்தியடைந்திருக்கிறது. பலகிரந்தங்களில் அடிக்கடி இதைக்குறித்து சொல்லப்படுகிறது. யுத்தத்தில் கொலைசெய்தால் பாவமல்லவென்று இப்பொழுதுதெரிந்து கொண்டாயல்லவா, மேலும் இன்றையத்தினம் உன்கடமைகளைக்குறித்து சிற்சில விஷயம் போதித்தேன். அதைக்கொண்டு உன் சமயோசித புத்தியைச் செலுத்தி உன்கடமைகளை நிறைவேற்றி சௌக்கியமாயிரு.

மகன்—அம்மா! நீங்கள்சொன்னவிஷயம் சரியாயிருக்கிறபடியால் ஞாபகம்வைத்துக்கொண்டு அப்படியே செய்கிறேன். காலத்திற்குத் தகுந்தபடி சிலவிஷயம் மாற்றிக்கொள்ள வேண்டுமென்று சொன்னவிஷயம் இன்னும் எனக்குத் தெரியவில்லை.

தாய்—மாற்றிக்கொள்வதென்ன? நம்தேசத்தில்கற்றவர்கள் கப்பல் யாத்திரை, விவாகாதிமுதலிய விஷயங்களை அடிக்கடிப்ரசங்கம் செய்வார்கள். உனக்கு வயது வந்த பிற்பாடு சமயோசித புத்தியின்படி சீர்திருத்திக் கொள்ளலாம்.

மகன்—சரியம்மா! விக்கிரகவணக்கத்தைக்குறித்து தங்களிடம் தெரிந்துகொள்ள நினைக்கிறேன்.

தாய்—அதைக்குறித்து இன்றையதினம் பேசசாவகாசமில்லை, நாளையதினம் சொல்லுகிறேன். நீ இனிமேல்பாடம்படித்து சாப்பாடு செய்துகொண்டு நித்திரைக்குப்போ. எனக்கும வேலையிருக்கிறபடியால் நாளையதினம் மற்றசங்கதிகளை உனக்குத் தெரிவிக்கிறேன்.

மகன்—சரி அம்மா! அப்படியே செய்கிறேன்.

# விக்கிரஹ வணக்கம்.

## 5-வது, அத்தியாயம்

மகன்—அம்மா! தாங்கள் இப்பொழுது சாவகாச மாயிருக்கிறபடியால் இன்னும் சில விஷயங்கள் அறிந்துகொள்ளவேண்டுமென் றபேட்சிக்கிறேன் இதற்கு முன் தாங்கள் சொன்னவிஷயங்களைமறக்காமல் ஞாபகத்தில் வைத்து அந்த முறைப்படி என்னுயுள்பரியந்தம் செய்வதாகத்தீர்மானித்துக்கொண்டேன், ஆனால் இன்னும் ஒருசந்தேகமிருக்கிறது. அதென்னவெனில், விக்கிரகவணக்கம் சரியல்லவென்று, அந்நிய மதபுஸ்தகத்தில் படித்தேன் அப்பொழுது எனக்கு அதுசரியாய்த்தோன்றிற்று மேலும் நம்முடைய மதத்தையே அநுசரித்துவந்த சிலபெரியோர்கள்விக்கிரகவணக்கம் கூடாதென்று சொல்லியிருக்கிறார்க ளென்றும், கல்லை வணங்குவது மதியீனமென்றும் சொல்லியிருப்பதாக அந்நியமதக்காரர்கள் எடுத்துக்காட்டி யிருக்கிறார்கள். அதன் விபரமென்ன?

தாய்—கூடியவரையிலும் இந்த சந்தேகத்தை நீக்குகிறேன். ஆனால் நம்முடைய மதக்காரர்கள் கல்லை வணங்கக்கூடாதென்று சொன்ன விஷயமும் தெரிவிக்கிறேன். அவர்கள் நம்முடைய மதப்படி பூரணஞானம் உதயமான பின்பு, தனக்குள் ஆத்மசொரூபதரிசனம் செய்திருப்பார்கள். அப்படிச் செய்தவர்கள் விக்கிரகவணக்கம் செய்ய வேண்டுமென்றவசியமில்லை. ஏனெனில் விக்கிரகவணக்கம் செய்தால், எந்தப்பலனையடைவார்களோ, அந்தப்பலனை அதற்கு முன்னமே அவர்கள் அடைந்து விட்டாரென்று நீயறியவேண்டும் மேலும், நம்மதத்திலுள்ளவர்களே விக்கிரக வணக்கம் கூடாதென்று பரிகாசம் செய்ததுயார்?

மகன்—அம்மா! சிவவாக்கியரென்னும் ஒரு சித்தர் முற்காலத்திலிருந்தாராம். அவர் தமிழில் சிலபாடல்கள் செய்தாராம், அதில் இரண்டொருபாடலை எடுத்

துக்காட்டி, அந்நியமதக்காரர்கள் பரிகாசம்செய்கிறார்கள். அதைப்பின் வருமாறுசொல்லுகிறேன்.

"நட்டகல்லைத்தெய்வமென்று நாலுபுஷ்பம்சாத்தியே
சுத்திவந்துமொணமொணென்று சொல்லுமந்திரமேதடா
நட்டகல்லும்பேசுமோ நாதனுள்ளிருக்கையில்
சுட்டசட்டிசட்டுவம்கறிச்சுவையறியுமோ,,

என்றும் மேலும்,

"ஓசையுள்ளகல்லைநீர் இருபிளவாக்குகிறீர்
வாசலில்பதித்தகல்லை மழுங்கவேமிதிக்கிறீர்
பூசனைக்குவைத்தகல்லில் பூவும்நீரும்சாத்துறீர்
ஈசனுக்குகந்தகல்லு எந்தகல்லுசொல்லுவீர்.,

என்றும் சொல்லுகிறார்கள் இது நமக்கு சரியாய் தோன்றவில்லையா.

தாய்—சிவவாக்கியர்ஞானியாதலால்தனக்குள் சொரூபதரிசனம் செய்து பிரமானந்தமடைந்தவர். மற்றவர்களும் பிரமானந்தமடையவேண்டுமென்ற எண்ணத்தினால், இந்தப்பாடல்கள் பாடியிருக்கக் கூடும். ஏனெனில், மற்றவர்கள் முயற்சிசெய்ய இது ஒருகாரணமாயிருக்கிறது இதைக் குறித்து ஜனங்கள் விஷயங்களை நன்றாய் விசாரித்தறிந்து கொள்வாரென்பதே, அவருடையகருத்து என்று நினைக்கவேண்டும் அதற்கு திருஷ்டாந்தமாக நீஇப்பொழுது விஷயம் தெரிந்துகொள்ள முயற்சிசெய்கிறாயல்லவா? எந்தவிஷயத்தைக் குறித்து முயற்சிசெய்தபோதிலும், அதற்குத்தகுந்தபடி பலன் உண்டாகுமெனபதுண்மையே அந்நியமதக்காரர்கள் தனக்குச்சாதகமாகவும், நமக்கு பாதகமாகவும் இரண்டுபாடலெடுத்துக்காட்டினார்கள். அதேசிவவாக்கியர் பாடலில் நமக்குச்சாதகமாகவும் அவர்களுக்குப் பாதகமாகவும் நானும்இரண்டு பாடலெடுத்துப்பாடிக்காட்டுகிறேன். அதைக் கவனமாய்க்கேள்.

"யேசுமதவாதிகள் இறந்தபின்கடைசியில்
பாசம்வைத்தொருமிக்க பலரையும்எழுப்பியே

நேசமிகபாவத்தை நிராகரித்துமோக்ஷத்தில்
வாசமிகவைக்கவேசர் வேசர்வரனுண்மையோ.

இல்லலாமகமதுரசூ லலாஇஸ்லாமதம்
அல்லலாவெனும்துலுக்கர்அல்லாக்கைவிரலேந்தை
மல்லலாகொடுத்து இந்துமதத்தர்கொண்டாடாவிடின்
சொல்லலாச்சுடுகாடாகி சுற்றிநாய்களோடுமே.

என்றும் அந்நியமதங்களைப் பழித்துச் சொல்லியிருக்கிறார் ஆகையால் ஒருவருக்கொருவர் துவேஷம் கூடாதென்று சொல்லியிருக்கிறேனல்லவா? அதைக்குறித்து இனிமேல் பேசக்கூடாது. விக்கிரகவணக்கம் அவசியமென்று உனக்குதெரியச்சொல்லுகிறேன் இகத்திலும் பரத்திலும் போகாதிசுகங்கள் அடையவேண்டுமென்று இச்சிப்பவர்களுக்கு, பிரம்மஞான முண்டாகமாட்டாது அப்படி ஞானமில்லாமல்போவதற்கு இவனுடையஇச்சைதான்காரணம் இவன்நினைக்கும் ஆசைகள் நிறைவேறும்பொருட்டு விக்கிரகபூஜை செய்து பிரதட்சண நமஸ்காரம் விதிப்படிசெய்யவேண்டும் இதனால் பாவங்கள் குறைந்து புண்ணியமதிகமாகி அந்தப்புண்ணியவசத்தினாலும், பகவான்கிருபையினாலும், இவன் கோரின கோரிக்கையெல்லாம் நிறை வேறும் அப்படி கோரிக்கைகள்நிறைவேறினபின் அனுபவஞானம் முதிர்ந்து, இந்தஉலக விஷயமெல்லாம், எத்தனை நாளைக்கிருந்தபோதிலும், ஒருநாளைக்கு நசிததுப்போகும் ஆகையினால் நசிக்காதபொருளாகிய பகவானைநாமடைந்து, சாசுவதசுகம்அடையவேண்டுமென்று எண்ணினவன், வேதாந்த சாஸ்திரத்தை விசாரிப்பான். அப்படி விசாரித்தால் உண்மைவிளங்கும். அந்த உண்மைப்படிநடந்து, தேகமுடிவில், சாசுவதமான பதவியையடைவான். இதுதான் மோட்சம் நாமெல்லாம் இந்தப்படி நடக்கதகுதியுள்ளவர்களல்ல நமக்கின்னும் மனதுபக்குவப் படவேண்டும். ஆகையால் விக்கிரகவணக்கம் செய்வதுதான் சிரேஷ்டம் மேலும் ஒருவன் மாடமாளிகை கூடகோபுரம் இன்னும் சகல ஐஸ்வரிய

ங்களையும் அனுபவிக்கும்பொழுது அவனைக்குறித்துமற்றவர்கள் சொல்வதென்ன வென்றால் அவன் பூர்வஜென்மத்தில் நல்லபுஷ்பங்களை யெடுத்துபகவானைப் பூஜித்திருக்கிறான். அந்த பூஜாபல விசேஷத்தினால் இப்பொழுது நன்றாய்ச் சுகங்களையனுபவிக்கிறான் என்று சொல்லிக்கொள்வார்கள் ஆகையினால் விக்கிரகவணக்கம் செய்வது உத்தமந்தான், இதைக்குறித்து இன்னும் சில விஷயங்களைவிளக்கிக் காட்டுகிறேன் முற்காலத்தில் பிரகலாதன்என்னும் ஓரசுர சிரேஷ்டனிருந்தான். அவன் தானவகுலத்திற்கதிபதியும் தனக்கு தகப்பனுமாகிய இரணியாட்சனை வணங்காமல் ஆதிமத்யாந்த ரகிதனாகிய அச்சுதனை மனதினால் தியானித்துப் பூஜித்துக்கொண்டிருந்தான் அது அவனுடையதகப்பனுக்கு விரோதமாகத்தோன்றி அவனைப்பலவிதத்திலும் இம்சைசெய்தான். இவ்வளவு இம்சையிலும் தன்மகன் சலிக்காமலிருப்பதைப்பார்த்து தியானிக்கும்அச்சுதன் எங்கேடா இருக்கிறானென்று சீறி கோபத்துடன்கொல்லவந்தான் அப்படிக்கொல்லவந்ததகப்பனைபார்த்து மனம்கலங்காமல் நான் தியானிக்குங் ஹரி, தூணிலுமிருப்பான் துரும்பிலுமிருப்பான் எங்குமிருப்பான் என்று பதில் சொன்னான் அப்பொழுது அசுரன் சீறி அந்தசபையிலிருக்கும் தூணைக்காட்டி நீ சொல்லுகிறவன் இந்தத்தூணிலிருப்பானா வென்று அதட்டிக்கேட்டான் உடனே யிவன் நீ தொட்ட தொட்ட இடந்தோறும், அந்தபகவான் அவசியம் காணப்படுவான் அப்படிக்காணப்படா விட்டால் என்னுடைய உயிரை நானே மாய்த்துக் கொள்ளுகிறேனென் றுருதியாக்ச் சொன்னான் உடனே அந்த அசுரன் அதிகக்கோபமாய் அந்தத்தூணைக்காலாலுதைத்தான் அதையறிந்தபகவான் தன் பக்தன் வாக்கியம் பொய்யாகாமல் உக்கிரகமான நரசிங்கரூபத்துடன் தூணைப்பிளந்துக்கொண்டுவெளியில்வந்தார் அதைப்பார்த்த அசுரன் அவரை கொலைசெய்யத் துணிந்தான் உடனேபகவான் தன் கூர்மையான நகத்தால் அவனைக்கிழித்து, அவன்குடலை மா

லேயாகதரித்தார் மேலும் தன்னை வணங்கும்பக்தனுகி ய பிரகலாதனுக்கு ராஜியபட்டாபிஷேகம் செய்விதது உன்னைப்போன்ற பக்தர்கள் கிடைப்பது மிகவும் அ றிதென்று அவன் பக்தியை மெச்சி உன்னைமனப்பூர் வமாக நேசிததவர்கள் என்னைத்துதித்த தற்குச் சமா னமானதென்று சொன்னர் இன்னும் இகலோகத்தில் வெகுநாள்ராச்யபோசத்தை யனுபவித்துக் கடைசியி ல் எனனுடைய சாயுச்யபதவியை யடைவாயென்று திருவாய்மலர்ந்தருளி தனனிருப்பிடம் சென்ருர். இ தைப்போலவேநாமும், கல்லில் கடவுளிருக்கிருர் என் று நம்பவேண்டும். நம்பாவிட்டால் பிரயோஜனமில்லை, மேலும் மார்க்கண்டருக்காக மறலிபட்ட பாட்டைக்கு றித்து சொல்லவும் வேண்டுமோ?

மகன்—அம்மா! அதென்னவிஷயம், அதையும் கொ ஞ்சம் சொல்லவேண்டும்.

தாய்—முற்காலத்தில் மார்க்கண்டேயன்என்று பெ யர்பெற்ற ஓர் சிறுவனிருந்தான். அவனுக்கு 16 வயது தான் ஆயுள்என்று தெரிந்துகொண்டிருந்தார்கள். அ ப்படித் தெரிந்துக்கொண்ட அவன் தாயும்தந்தையும அவனது 15 வயதில் அவனைப்பார்த்து கண்ணீர் விட் டுத் துக்கப்பட்டார்கள். அதைக்கண்டமகன், என்னை க்குறித்துநீங்கள் அகாரணமாகதுக்கப்படுவதென்ன? வென்று கேட்டான். அதைக்கேட்டதாயும்தந்தையும் விஷயமின்னதென்றுசொல்லவாயெழாமல் அதிகமாக வருத்தப்பட்டார்கள். சிறுவன்மேலும்சொல்லவேணு மென்று பிரார்த்திததான். உடனே அவர்கள் இன்னு ம் நீ ஒருவருஷம்தானிருப்பாய் அதற்குமேல் இறந்து போவாயென்று துக்கத்துடன் தெரிவித்தார்கள். அ தைக்கேட்ட சிறுவன், பிராமணனுதலால் சாஸ்திரமு ழுவதும்படித்திருந்தான் உடனே தனக்குள் ஓர்போ ஜனை செய்துக்கொண்டு தாயும் தகப்பனையும் நமஸ்க ரித்து எனக்கு ஒரு வருஷம் யாத்திரைபோகும்படி உத்திரவளிக்கவேண்டும் என்று பிரார்த்தித்தான் உட

ளே அவர்கள் நீ இன்னும் ஒருவருஷம் தானேயிருப்பாய் அதற்குள் எங்களை விட்டு ஏன் பிரிந்திருக்கவேண்டுமென்று வருத்தப்பட்டார்கள். அதற்கு சிறுவன் அப்படியல்ல உங்கள் விசனத்தை நீக்கும்பொருட்டு இப்பூவுலகத்திலுள்ள சிவாலயங்கள்தோரு மபிஷேக அர்ச்சனைகள்புரிந்து அவர் அனுக்கிரகப்படி தீர்க்காயுள் பெற்றுவருகிறேன். அப்படிச்செய்யாமல் போனால் நான் உங்களுக்குப் பிள்ளையல்லவென்று சபதம் செய்தான். அவர்கள் அகமு முகமூ மலர்ந்து சங்கரபகவான் அருள் பெற்றுவரக்கடவாயென்று ஆசீர்வதித்தார்கள். உடனே சிறுவன் அவர்களை நமஸ்கரித்துப் புறப்பட்டான் அப்படிப்புறப்பட்டு ஆதிசேதுவிலிருந்து இமாசலம் பரியந்தமுள்ள சிவாலயங்களில் பக்திசிரத்துடன் அர்ச்சனைகள் செய்துக்கொண்டேபோனான். திருக்கடையூர் என்னும்க்ஷேத்திரத்தில் ஒரு நாள் சாயங்காலத்தில் சிவலிங்கத்திற்கர்ச்சனை செய்து கொண்டிருந்தான். இப்படி யர்ச்சனை செய்துகொண்டிருக்கும் பொழுது, அங்கே எமலோகத்தில் சித்திரகுப்தன்ரிகார்டில் இவன் ஆயுள் அன்றையோடு முடிந்துபோவதைக்கண்டறிந்து எமதர்மராஜன் கிங்கிரர்களை ஏவினான். உடனே கிங்கிரர்கள் திருக்கடையூரில் வந்து அர்ச்சனைசெய்யும் மார்க்கண்டேயனைப் பார்த்து, ஏ! மார்க்கண்டேயா இன்றோடு உன்னுயுள் முடிந்துப்போகிறபடியால், எங்களிடம் வரக்கடவாயென்றுக் கூப்பிட்டார்கள். சிறுவன், வரமாட்டேனென்று, உங்களெஜமானிடத்தில் தெரியப்படுத்துங்களென்று சொன்னான். சிறுவன சிவபூஜா துரந்தரனாயிருக்கிற படியால் அவன் சமீபத்தில் போய் உயிரைக்கவர சக்தியற்றவர்களாய் திரும்பிப்போய் எமதர்மராஜனுக்குத் தெரியப்படுத்தினார்கள். உடனே, எமன்கோபித்து எருமைக்கடாவின்மேலேறி எமபாசத்தைஎடுத்துக்கொண்டு அதிவேகமாக திருக்கடையூருக்குவந்தான் வந்ததும் ஏ! மார்க்கண்டேயா! எப்பேர்ப்பட்டவர்களுக்கும் ஆயுள்முடிவிருக்கிறபடியால், நீஎன்னிடம்வரக்கடவா

யென்றுக்கூப்பிட்டான். சிறுவன் எமனைக்கண்டு நடுநடுங்கி பூஜையைவிட்டுவிட்டு சிவலிங்கத்திற்குச் சமீபமாய்ப்போய்ப் பிரார்த்தித்தான். உடனே எமன்பாசத்தைவீசினான் சிறுவன் பாசத்தைக்கண்டவுடன் பயந்து கடவுளே நீ என்னைக்காப்பாற்றவேண்டும் என்று சிவலிங்கத்தைக் கட்டிக்கொண்டான். எமன் வீசினபாசமானது சிறுவன்மேல் விழும்போது சிவலிங்கத்தின்மீதும் விழுந்தது. உடனே பரமசிவன் அதிகக்கோபத்துடன் அதிலிருந்தெழுந்து இடதுகாலால் எமனை ஓர் உதை உதைத்துத்தள்ளினார். உடனே எமன் பாசத்தைக் கையில்வைத்துக்கொண்டு கீழேவிழுந்து மாண்டுபோனான். சிறுவன் பயத்தினால் வாய்குளறி பகவானைப்பணிந்து ஸ்தோத்திரம்செய்தான். தேவர்களெல்லாம் அவ்விடத்தில்வந்து பிரார்த்தித்து. பகவானே தென்றிசைக்கு அதிபதியாய் நீதிசெலுத்தும்படி தாங்களே எமனை நியமித்தீர் தங்கள் ஆக்கினையை சிரமேற்கொண்டு அப்படியே செய்துவந்தான் இப்பொழுது அவன்மாண்டுபோனபடியால் உயிரைக்கணக்கறிந்துகவர எமனில்லாதபடியால் காலம் தலைகீழாய்ப்போய்விடும். ஆனதால் தாங்கள் தயவுசெய்து உயிர்ப்பிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். உடனே பகவான் இறந்துகிடக்கும் எமனையெழுப்பினார். உடனே அவன் பகவான்காலில்விழுந்து தாங்கள் எப்படிஉத்தரவு செய்கிறீர்களோ அப்படிசெய்கிறேன் என்று பிரார்த்தித்தான் அதற்கு பகவான் அவன்மேலிரக்கங்கொண்டு நீ இன்றுமுதல் சிவபூஜைசெய்கிறவர்களிடம் போகாதே பகவானைப்பக்திசெய்யாமலும் பகவான் நாமத்தை உச்சரிக்காதவர்களையும், அவரைப்பூஜைசெய்யாம லிருப்பவர்களிடத்திலும் உன்னுடைய பாசம்செல்லக்கடவது உண்மையாய்பக்திசெய்கிறவர்களிடம் உன்பாசம் செல்லமாட்டாது என்றுசொன்னார். அதற்குஎமன் தங்கள் உத்தரவுப்படி செய்கிறேனென்று பிரார்த்தித்து அவரைப்பணிந்து தன்னிருப்பிடம் போய்ச்சேர்ந்தான்.

பிறகு பரமசிவன் மார்க்கண்டேயனைப்பார்த்து உன்பக்தியைமெச்சினேன் உனக்குப்பதினாறுவயது ஆயுளென்பதுவாஸ்

தவமே ஆனாலும் உன் பூஜையின் மகிமையால் உன்மேல் எம பாசம் செல்லவில்லை ஆனதால் நீ எண்ணும் பதினாறாய் இருக்கக்கடவதென்று வாழ்த்தினார். அதனால் அவனுக்குப் பதினேழாவதுவயது வராமல் பதினாறுவயது வளர்ச்சியுடன் நின்றுவிட்டான். அவன் இப்பொழுதும் எண்ணும்பதினாறாய் இருக்கிறானென்று சாஸ்திரபுராணங்களில் சொல்லப்படுகிறது.

பிறகு மார்க்கண்டேயர் பகவான் அனுக்கிரகத்தினால் தாய் தந்தை மலரடியில்பணிந்தான். அப்படிப்பணிந்த மகனை தாய்தந்தையர்கள் வாரியெடுத்து வாழ்த்தி நடந்தசங்கதிகளைக் கேட்டு ஆனந்தமாயிருந்தார்கள். இதனால் விக்கிரகவணக்கம் நன்மையையே தருமென்று நினைக்கவேண்டும். மேற்சொன்ன பிரகலாதனுக்காகத் தூணிலும், மார்க்கண்டேயனுக்காகக்கல்லிலும் கடவுள்தோன்றி காப்பாற்றினார். இதை நாம் உறுதியாகநம்பி விக்கிரகவணக்கமே செய்யவேண்டும். மேலும்நான் உனக்கு சுருக்கமாக ஒன்றுசொல்லுகிறேன் எல்லாவற்றிலும் எதுவரைக்கு நமக்கு ஆசையிருக்கிறதோ பிரகிருதியில்தோன்றின மாயாகாரியத்தில் பிரமை எதுவரைக்கு மிருக்கிறதோ அதுவரைக்கும் நாம் நற்கருமமாகிய ஜெபதபாதிகள், தானதர்மம், விக்கிரகவணக்கம் முதலியது செய்துகொண்டே வரவேண்டும். அப்படிச்செய்துக்கொண்டேவந்தால் நமக்குள்ளொழுந்த ஆசைகளை நிறைவேற்றிக்கொண்டேவரலாம். இப்படி எல்லா ஆசையும் நிறைவேறினால் பிறகு நமக்கொன்றிலும் ஆசையிருக்க மாட்டாது அப்பொழுது நாம் பிரம்மஞானமடைய அதிகாரியாவோம். நம்முடையபுத்தியும் மயக்கங்கொள்ளமாட்டாது. நமதுபுத்தி தெளிந்து நிற்பதால் நம்மை புத்திமானென்றும், பண்டிதனென்றும் சொல்லுவார்கள். இதைக் குறித்து பக்குவமடையுப விபரம் முன்னமே உனக்குப் புனர்ஜென்மவிஷயத்தில் சொல்லியிருப்பதால் இங்கே சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் விக்கிரகவணக்கம்செய்து படிப்படியாய் உயரவேண்டிய உபாயத்தைத்தேடவேண்டும் விக்கிரகவணக்கம் சரியென்று இப்பொழுது உனக்குத் தோன்றவில்லையா?

மகன்—ஆமாம்மா! இப்பொழுது விக்கிரகவணக்கம் சரியென்று தெரிந்துகொண்டேன். பகவானைப் பக்தியாய்ப்பணிந்து பூஜிப்பேன் அப்படிப்பூஜித்து நன்மையையேயடைவேன் தாங்கள் மேலேசொன்ன விஷயத்தில் சாசுவதபதவி யடைய அதிகாரியுள்ளவன் வேதாந்தத்தைவிசாரிப்பானென்றுசொன்னீர்களே அதென்ன? எனக்குக்கொஞ்சம்சொல்லவேண்டும்.

தாய்—வேதாந்தத்தைக்குறித்து பாலனான உனக்குசொன்னால் பிரயோஜன மிருக்கமாட்டாதென்று நினைக்கிறேன். அப்படிவேதாந்தம் உனக்கு உபதேசித்தால் (குட்டிவேதாந்தம் குடியைக்கெடுக்கும்) என்ற பழமொழியை யுண்மையாக்கிவிடுவாய். சித்தம் தெளிந்தவர்க்கே இதன் விஷயங்கள் புலப்படும். மற்றவர்களுக்குச்சொன்னால் பிரமையுண்டாகுமென்று மகான்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

மகன்—அம்மா! உங்களுக்குத்தெரிந்த விஷயங்களை நானும் தெரிந்துகொள்ளவேண்டுமென் றபேட்சிக்கிறேன் தயவுசெய்து கிஞ்சித்தாவது எனக்குத்தெரியும்படி சொல்லவேண்டும் மேலும், தாங்கள் (குட்டி வேதாந்தம் குடியைக் கெடுக்குமென்று) சொன்னதின் அர்த்தமென்ன?

தாய்—அதனர்த்தமும் கொஞ்சம் சொல்லுகிறேன் வேதாந்தத்தில் ஆத்மாவும், ஞானமும சமமென்று சொல்லப்படுகிறது. ஆத்மா ஏகசொரூபத்தினால், எங்கும் வியாபித்திருக்கிறதென்றும், அதனால் அதற்குப்பின்னமில்லையென்றும் சர்வவியாபியென்றும் சொல்லப்படுகிறது. அதனால் பூரணஞானமுள்ளவர்கள் இந்த அர்த்தத்தின்படி உண்மையைக் கண்டறிந்து எல்லா ஆத்மசொரூபமும் ஒன்றென்றுநினைத்து ஒருவருக்கும் இடைஞ்சல்செய்யாமல் விக்கிரகபூஜை முதலியதைத்துறந்து அபேதபுத்தியுடன் கூடியிருப்பார்கள். நமக்கு பேதபுத்தி யிருப்பதால் வேதாந்தத்தில்சொன்னபடிநடத்த நம்மால்முடியாது காரியமிப்படியிருக்க, குட்டிகள் வேதாந்தம் படித்துக்கொண்

டால் நற்கருமம் செய்யாமல் வேதாந்தவிஷயத்தின் உண்மை யையறியாமல் கெடுதலேசெய்துக்கொண்டுவருவார்களென்று நீயறியவேண்டும். இப்படிக்கெடுதலே செய்துகொண்டுவருவ தினல் இகபரத்திற்கு உபயோகமில்லாமல் நரகத்தையடை ந்து நாசமடைவார்கள்.

மகன்—இப்படிச்சொன்னல் எனக்குஅர்த்தமாகவில்லேயே விவரித்துச் சொல்லவேண்டும்.

தாய்—விபரம் தெரிவிக்கிறேன். நமக்கு சித்தசுத்தம் உண்டாகும்பொருட்டு நீதிமார்க்கமெல்லாம் கர்மகாண்டத்தில் விளக்கியிருக்கிறர்களென்று முன்சொல்லி யிருக்கிறேனல்ல வா? அதன்படியேநடப்பதுதான் சாதாரணமான நம்போன்ற மனிதர்களுக்கு உத்தமம். அப்படியில்லாமல் வேதாந்தம்படித் துக்கொண்டு அதன்படிநடக்கச்சக்தியில்லாமல் வாசாஞானம் பேசிக்கொண்டும் ஆத்மா பின்னமில்லாம லிருக்கிறபடியால், பிரம்மம் ஒன்றென்றும், அதனல் சமுசாரத்திற்கும் சகோதரி க்கும் பேதமில்லேயென்று நினைக்கக்கூடும். மேலும் ஜாதிபேத மில்லாமல் கண்டவீட்டில் சாப்பிடுவார்கள். சூத்திரனுக்கன்ன மிட்டு சேஷத்தைபுசிப்பார்கள். ஜாதிவிட்டுஜாதி விவாகம்செ ய்வார்கள். இப்படிச்செய்யலாமாவென்று பெரியோர்கள்கேட் டால், பிரயோஜனமில்லாத பேச்சுக்களைக் குதற்கமாகப்பேசு வார்கள். ஆத்மா ஒன்றுதானே, பிரம்மம் ஏகந்தானே, இதில் பேதம் சொன்னவர்கள் நரகமடைவார்களென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதல்லவா என்றும், திருட்டுத்தனமான வேலேகள் செய்வார்கள். ஏன் ஊரார் சொத்தைத் திருடுகிறு யென்றுகேட்டால், பரப்ரம்மம்தவிர, உண்மையான பொருள் வேறில்லே. ஆகையால், அவனன்றி யோரணுவும் அசையா தென்று சொல்லிருப்பதால், உண்மையில் நானெங்கே திருடி னேன். கடவுள் எனக்குள்ளிருந்து அசைத்ததினு லல்லவா திருடும்படி ஏற்பட்டது. உண்மையில் கடவுள் தான்எனக்குள்

ளிருந்து எவினவர். அதற்குநானென்னசெய்யட்டும் என்று வாய்கொண்டமட்டும் வம்புப்பேச்சுக்களைப்பேசுவார்கள். மேலும், திருட்டுத்தனங்கள்செய்து விலங்கு மாட்டிக்கொண்டவனை என் அப்படிச்செய்தாயென்றுகேட்டால் கடவுள் எங்கள் தலையிலப்படி விதித்தார். அதற்கு நானென்ன செய்யட்டும் என்று சொல்வார்கள். இப்பேற்பட்ட லுத்தர்கள் தான்கெட்டுப்போவதும் தவிர, இதரர்களையும் கெடுத்துவிடுவார்கள். ஆகையால், பாலர்களுக்கும் விவேக ஹீனர்களுக்கும் தத்துவ ஞான விபரம் உபதேசிக்கப்படமாட்டாது.

மகன்—அம்மா! இப்படியிருந்தால் எப்பொழுதுதான் ஞானம் தெரிந்துகொள்வது.

தாய்—இதற்காகத்தான் பலவிதமாய் சட்டதிட்டங்கள் எற்படுத்தினாரென்றும், அதன்படி தெரிந்துகொண்டு படிப்படியாய் உயரவேண்டுமென்றும், நல்லகருமங்களும், விக்கிரக வணக்கமும்செய்து மேன்மையடைய வேண்டுமென்று உனக்கு எத்தனையோ தடவை உனக்குச்சொல்லியிருக்கிறேனல்லவா? இதைத்தவிர வேறுபாயமில்லை. உண்மையில் மனத்தினாலேயே கடவுளை தியானிக்கவேண்டுமென்றுசொல்வது சரியாயிருந்தாலும் அப்படி தியானிக்க மனம்கட்டுப்படுவது இலேசானகாரியமல்ல. அதனால் மனதை நிறுத்துவதற்கு ஒரு ரூபமுள்ளபொருளை எதிரில்நிறுத்தி அதில்மனம் லயப்படும்படும்படி அப்பியாசம் செய்வதுதான் விக்கிரகவணக்கம் இப்படிச்செய்துக்கொண்டேவந்தால் பாவமணுகமாட்டாது. பாவம் எப்பொழுதில்லையோ அப்பொழுது படிப்படியாயுயர்ந்து மோக்ஷமடைய யேதுவாகும்.

மகன்—அம்மா! நீங்கள் சொன்ன விஷயமெல்லாம் சரியென்றுதெரிந்துகொண்டேன். இன்னும் சில விஷயம் தெரிந்துகொள்ளவேண்டும் அதென்னவெனில், நான்ஒருநாள்தாயுமான சுவாமிகள்பாடல் புஸ்தகத்தை கொண்டிருந்தேன் அதில் சில விஷயங்களின் நுட்பங்கள் விளங்காமலிருந்தது. பிறகு

நீங்கள் எனக்குப்போதித்த விஷயத்திலிருந்து தெரிந்துகொ ண்டேன். இன்னும் ஒரு சிறுவிஷயமாத்திரம் தெரியவில்லை. தாயுமானவர் மோட்சமடைந்தாரென்று சொல்லாமல் அகண் டபரிபூரண சச்சிதானந்தத்தில் கலந்தாரென்று அதில்சொன் னவிஷயம் எனக்குப்புலப்படவில்லை. ஏனெனில், அவரேகட வுளாய்விட்டாரா? அல்லது அவர் சன்னதியில் வசிக்கிறாரா? இதன் விபரமும் கொஞ்சம் சொல்லவேண்டும்

தாய்—என்னருமை மைந்தனே! எத்தனை பெரியகேள் வியைக்கேட்டாய் இதைக்குறித்துபேசுவதற்கு மகாத்மாக்கள் முதலாய் மயங்குவார்களே, இப்படியிருக்க அந்த வேதமுடி வின் அர்த்தத்தை உனக்கு விவரிக்க நான் தகுதியுள்ளவளோ இந்த சங்கதி நீமுன்கேட்ட சாதாரணமான கேள்விகளைப் போலல்ல இருந்தாலும் பகவான் கிருபையினாலும், பெரியோ ர்கள் அனுக்கிரகத்தினாலும் தெரிந்த மட்டிலும் உபாயமாக உனக்குத் தெரிவிக்கிறேன். நீபடித்தபிற்பாடு பண்டிதனாகும் பொழுது இதைக்குறித்த விஷயங்கள் நன்றாய்த்தெரிந்துகொ ள்ளக்கூடும். பேதமையான நான்கூடியவரையிலும் உனக்குத் தெரிவிக்கிறேன். மேற்கூறிய கேள்விக்கு எவ்விதமானவிடை கொடுத்தபோதிலும் உனக்கு சந்தேகமாகவே தோன்றுமென் றுநினைக்கிறேன். ஏனெனில் நமக்குப் பூரணமான ஞானமில் லாதபடியால் அந்த நுட்பமான கருத்தைத்தெரிந்துக்கொள்ள அசக்தர்களாயிருக்கிறோம். இருந்தபோதிலும், கூடியவரையி லும் உபாயமாக விளக்குகிறேன். அகண்டபரிபூரண சச்சிதா னந்தத்தில் கலந்தாரென்றால் கலந்தபின் சத்துள்ளதெய்வமா கிறான். அப்படி சத்துள்ள தெய்வமாகும்பொழுது பலவித சக்தியுள்ள கடவுளைப்போல அதாவது சிருஷ்டி, திதி, சம் காரமென்னும் முத்தொழிலையும் இவனும் செய்யக்கூடியவனா யிருக்கவேண்டும். பரம்பொருள்தவிர, மற்ற ஞானிகள் மேற் கூறிய முத்தொழிலும் செய்தார்களென்று நூல்களில் விளக்கி காட்டப்படவில்லை. ஆனாலும் விசுவாமித்திரர் மகரிஷி பிரம்ம

சிருஷ்டிப்புக்கு எதிரிடையாக சிலதை சிருஷ்டித்தாரென்று சொல்லப்படுகிறது. அப்படிசொல்லப்பட்டாலும் பகவானைக் குறித்து தபம்செய்து அந்தத்தபோமகிமையால் செய்தாரென்று நாம் நினைக்கவேண்டுமேதவிர, விஸ்வாமித்திரரே பரம்பொருளல்லவென்று நினைக்கவேண்டும். விஸ்வாமித்திரருக்கும் பரம்பொருளுக்கும் வித்தியாசமிருக்கிறது. உபநிஷத்துக்களிலும் சில இடங்களில் சொல்லப்படுவதென்னவென்றால் சந்நியாச ஆஸ்ரமம் பெற்றுக்கொண்ட ஞானிகள் பிரம்மலோகமார்க்கமாய் முக்தியடைகிறார்களென்றும், பிரம்மலோகத்தில் போய் சேர்ந்தவுடனே அவ்விடத்தில் திவ்வியசரீரம்பெற்று, சகல சுகபாக்கியங்களையும் அனுபவிக்கிறானென்று சொல்லப்படுகிறது. மேலும் சிலர் அந்தலோக மார்க்கமாய் விதேக முக்தி யடைகிறார்களென்றும் சொல்லப்படுகிறது. மேலும், சிலர் பூலோகத்தில் தேகமிருக்கும் பொழுதே ஜீவன்முக்தி யடைகிறார்களென்றும் சொல்லப்படுகிறது. ஜீவன்முக்தி விபரம் என்னவென்றால், மனம் சங்கற்பங்களற்று புத்தியுடன் சேர்ந்து புத்தி ஆத்மதேஜசுடன்சேர்ந்தால் அதுவே ஜீவன்முக்தியென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படி ஆத்மதேஜசுடன் மனமும் புத்தியும் லயமாகிற விஷயம் பிரத்தியட்சமாய் சில மகான்கள் தற்காலத்திலும்தெரிந்துகொண்டு பிரம்மானந்தத்தை யனுபவித்து வருகிறார்களென்று கேள்விப்படுகிறோம். பகவத்கீதையில் பகவான் சொல்லுவதாவது, சித்தத்திலுள்ள மலினமெடுபட்டு சுத்தசித்தமாகி, நிராசையுடன் தன்னிடத்திலேயே மனதைநிறுத்தினவனுக்கும், தனக்கும் பேதமில்லையென்றும் சொல்லுகிறார். இந்த அர்த்தத்தில் நுட்பமான கருத்துக்கள் அடங்கியிருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். இதைக்குறித்த சிலவிஷயங்களை திருஷ்டாந்த பூர்வமாய் உனக்கு விளக்கிக்காட்டுகிறேன் அதாவது நாமிருவரும்தாயும்பிள்ளையுமா யிருக்கிறோமல்லவா இப்படியிருக்கும்பொழுது ஒருவர்மேலொருவர் அன்பாயிரு

ப்பதால் சிலவிஷயங்கள் ஒன்ருகவும், சில விஷயங்கள் வெவ்வேருகவும் மதிக்கப்படும். எப்படியென்ருல் நமக்குப்பிரியமுள்ளவர்கள் ஏதாவதுபழங்களை உனக்காவது அல்லது எனக்காவது கொண்டுவந்துகொடுத்தால் நாம் ஒருவரைவிட்டு ஒருவர் புசிக்கமாட்டோம். அப்படிப்புசிக்காமலிருப்பதற்குக் காரணமென்னவென்ருல் அன்புதான் காரணமென்று நீ தெரிந்துக்கொள்ளவேண்டும்.

மகன்—அம்மா! நாமிருவரும் ஒருவரை விட்டொருவர் பிரிந்து வேறு ஊர்களில் தங்கியிருக்கும் பொழுது, ஒருவரைவிட்டொருவர் புசிக்கும்படி ஏற்படுமே அப்படி ஏற்பட்டால், அன்பில்லை யென்று சொல்லக்கூடுமா?

தாய்—நான் குறித்துச்சொன்ன விஷயம் அப்படியல்ல பின் எப்படியென்ருல் அடுத்தஊர்களிலிருந்தாலும், அல்லது வேறெங்கேயாவது இருந்தாலும், உண்மையான அன்புமாத்திரமிருந்தால், அவர்களை நினைத்துக்கொண்டே சாப்பிடுவார்கள். அப்படி நினைக்கும்பொழுது, அன்புள்ளவர்கள் மனதில் தோன்றுவார்கள். அதனுல் சந்தோஷமுண்டாகும். இன்னும் சில விஷயம் விரித்துச் சொல்லுகிறேன் நமக்கு அன்புள்ளவர்கள் இறந்துபோனுல் இருக்கிறவர்கள் அவர்கள்மேல் அன்பை செலுத்திக் கொண்டேயிருப்பார்கள்.

மகன்—அம்மா! அன்புள்ளவர்கள் இறந்துபோனுல் நாம் அவர்கள்மேல் எப்படி அன்பை செலுத்தமுடியும்- இதை எனக்கு விரித்துச் சொல்லவேண்டும்.

தாய்—சரி, அப்படியே சொல்லுகிறேன்கேள். நாம் பிரியம் செய்யும்படியான மனிதர்கள் எப்பேற்பட்ட கல்கட்டடத்திற்குள்ளிருந்தாலும் நாம் செலுத்தும் அன்பானது. அந்தக்கல்கட்டடத்தை பேதித்துக்கொண்டு, அதறகுள்ளிருக்கும் மனிதரின்மேல் பாயும். அப்படிப்பாய்கிறதற்கு அந்த அன்பிற்குச்சக்தியுண்டு. ஏனெனில் அன்பு தெய்வீகமானதென்று

நீயறியவேண்டும். இப்படி யிருக்கும்பக்ஷத்தில், தனக்கன்புள்ளவர்கள் இறந்துபோனால் இறந்துபோனவர்களை பாவபுண்ணியத்திற்குத் தகுந்தபடி ஓரிடத்தில் வைக்கப்படுகிறார்க ளென்று சொன்னேனல்லவா? அந்த இடம், இந்திரலோகமாயிருந்தாலும் சரி, சந்திரலோகமாயிருந்தாலும் சரி, இப்பூமண்டலமாயிருந்தாலும் சரி, இன்னும் இந்த பிரம்மாண்டத்திலுள்ள மற்ற மண்டலங்களிலிருந்தாலும் சரி, எப்பேற்பட்ட இடங்களிலும், எதுவாயிருந்தாலும் சரி, பூரணமான அன்புமட்டுமிருந்தால், இறக்காதவர்கள், இறந்தவர்மேல் அன்பைசெலுத்திக்கொண்டே இருக்கலாம். இதற்குத்தடையாதொன்றும் கிடையாது. இதைக்குறித்து எந்த ஜாதியாரும், எந்த மதத்தாரும், எந்த தேசத்தாரும், மறுக்கக் கூடாதென்றேசொல்லவேண்டும். இதனால் அநேகமதங்களினுடைய கருத்தென்னவென்றால், பகவானிடத்தில், மனப்பூர்வமாகச் செலுத்தும் பூரணமான அன்புதான்காரணமென்று சொல்லுகிறது. இந்த அன்புதான் இவன் மோக்ஷமடையயேது வாகிறது. எப்படியென்றால், நம்மிடத்தில் பகவான் அன்பு செலுத்தினால், நாமும் பிரதியன்பு செலுத்துகிறோம் பகவானும் நமக்கும் பிரதியன்பு செலுத்துகிறார். இந்த அன்பினால், ஐக்யபாவம் உண்டாகும். இந்த அன்பை அபின்னமென்றுசொல்லப்படுகிறது.

மகள்—அம்மா! இதன் விபரம் இன்னும் நன்றாய் விளங்க வில்லை. விளங்கும்படி சொல்லவேண்டும்.

தாய்—சரி, கவனமாய்க்கேள். நாம் ஒருவரிடத்திலிருந்து சாமான் வாங்கிக்கொண்டால் அதற்கு பிரதியாய் விலை கொடுக்கிறோமல்லவா? இது சகஜம். ஒரு சாமானைக்கொடுத்து மற்றொருசாமானை வாங்குகிறதுபோல, அன்புக்குபதில் சாமான் கொடுக்கவேறில்லை. ஏனென்றால், மற்ற சாமான்கள் ஒருவருக்கொருவர் இனமாய்க் கொடுக்கும்பொழுது அன்புதான் காரணமாயிருக்கிறது. அப்பேற்பட்ட அன்புக்கு, மற்றசாமான்களீடாகுமா ஆகாது. அன்புக்கு பிரிதிய

ன்புதான் ஏடாகும். இப்படியன்புள்ளவர்கள் மரணமடைந்தால் மரணமடைந்தவர்மேல் அன்புசெலுத்திக்கொண்ட மற்றொருவர் மரணமடைந்த பின்பு அந்த அன்பினால் மறுஜென்மத்தில் சிநேகப்பட்டு, பூர்வத்தில் இவர்கள் எண்ணம் எதை நிறைவேற்றவேண்டுமென்று நினைத்திருந்ததோ அந்த எண்ணங்களை நிறை வேற்றுவார்கள் இதற்கு காரணம் முன் செலுத்தின அன்புதான். இதைப்போலவே, நானும் நீயும் அன்பாயிருந்தால், நானே நீயாகி விடக்கூடுமா? நீயே நானாகி விடக்கூடுமா? கூடாதல்லவா? அன்பினால் ஒருமைப்பட்டிருக்கிறபடியால் பேதமிருக்கமாட்டாது: உருவத்தில் பேதமிருக்குமென்று தெரிந்து கொள். இப்படி அபின்னமான அன்பில் ஐக்யப்பட்டிருப்பதே, மோட்சமென்று சொல்லிருக்கிறார்கள். எப்படியென்றால், மோட்சமடைந்தவர்களெல்லாம் பரம் பொருளானால் அதைக்குறித்தது தேகமுள்ளபோதே ஜீவன் முக்திபெற்ற மகான்கள், நான்தான் அந்த பரம் பொருளென்று சொல்லி யிருக்கவேண்டும். அப்படிச் சொன்னதாக ஒருநூலிலும் காணப்படவில்லை. தேவரிஷியான நாரதரும், வியாசாதிமுனீஸ்வரர்களும், வசிஷ்டாதி பிரம்மரிஷிகளும், எல்லாம் தெரிந்து கொண்ட மகான்கள் இப்பேற் பட்ட மகான்கள் முதலாய் நான் அந்த பரம்பொருளென்று நமக்குச் சொல்லாமல் எல்லாசக்தியும் வல்லமையும்பெற்ற பரப்பிரமவஸ்து ஒன்றிருக்கிறது, அவரைக்குறித்தே பக்திசெய்யவேண்டும். அப்படி பக்திசெய்தால் முக்தியடைவார்களென்று நமக்குத் தெளிவாய் தெரிவித்திருக்கிறார்கள், இந்தமகாத்மாக்களை அந்தக்காலத்திலுள்ள ஜனங்கள் இந்த மகாத்மாக்களுடைய மகிமை வெளிப்படும் பொருட்டும், தனக்கு உபதேசாதிகள் செய்யும் பொருட்டும், நமஸ்காரவந்தனம் செய்து ஸ்தோத்திரம் புரியும் போது. அவர்கள் சொன்ன விபரமும், சந்திரசடாதர சாம்பசிவ மூர்த்திக்கொப்பாகிய மகாத்மாவே உம்முடைய தரிசனம் எனக்குக் கிடைத்தது. நான் இனி

கிருத்தார்த்தனானேனென்று சொல்லித் துதித்தார்களே தவிர, சாம்பசிவமூர்த்தி நீர்தான் என்று சொல்லவில்லை. அந்த பரம்பொருள் நீர்தானென்றும் சொல்லவில்லை. ஒருவரையும், ஒப்புசொல்லக்கூடாத சுகர் பிரம்மரிஷியும் மகா பாகவதனான பரிக்ஷித்து மகாராஜனுக்கு பாகவதம்பன்னிரண்டு ஸ்கந்தமும் உபதேசம் செய்யும்பொழுது, நான்தான் அந்த பரம்பொருளான கடவுளென்று சொல்லாமல், ஆதிமத்யாந்த ரகிதனாகிய ஹரி யிருக்கிறார் அவரைப்பக்தி செய்ய வேண்டுமென்றும் உபதேசித்தார். இப்படி சிருஷ்டிகாலம் தொடங்கி ஆண்டவனுக்கடிமைப் பட்ட அநேகபக்தர்கள் மோட்சமடைந்திருக்கிறார்கள். அவர்கள் மோட்சமடையும் உபாயம் நமக்குத் தெரியும்படி அனுக்கிரகம் செய்ததில், நான் மேற் சொன்ன விபரப்படியே சொல்லி யிருக்கிறார்கள். மேலும், தமிழ்வேதமென்று சொல்லப்பட்ட தேவாரப்பதிகங்களைப்பாடி ஜனங்களைப் பிழைக்கும்படி செய்த அப்பர், சுந்தரர். மாணிக்க வாசகர், சம்பந்தர் முதலிய பக்தர்களும் பரமசிவனை அபிஷேக அர்ச்சனை செய்தால் முக்தியடையலாமென்று பாடினார்களே தவிர, நாம்தான் கடவுளென்று சொல்லவில்லை, மகா கனம் பொருந்திய சங்கரர், மத்வர், ராமானுஜர் முதலிய மதாசாரியார்களும், நாம் அந்தபரம்பொருளை யடையவேண்டிய உபாயத்தை போதித்தார்களே தவிர, நாம்தான் அந்தபரம் பொருளென்றே சொல்லவில்லை. பகவான்மட்டும் உண்மையான பரமாத்மா வாகையால் நான்தான் அந்த பரம் பொருளென்று பகவத்கீதையில் சொல்லி யிருக்கிறார்.

மகன்—அம்மா! தாங்கள் மேலே சொன்ன விபரப்படி அன்பானது அபின்னமென்றும், சக்தியுள்ளதென்றும், பின்னமானது உருவமென்றும் சொன்னீர்களே, அதன் விஷயமென்ன?

தாய்—பின்னம் பின்னமாய்க் காணப்படுகிற தேகத்தை உருவமென்று சொல்லப்படும். ஜீவன் முக்தி பெற்ற மகான்கள் தேகாந்யத்தில் விதேக கைவல்யம் அடைவார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் தேகசம்பந்தத்தால் அறியவேண்டிய விஷயங்களெல்லாம் பல ஜென்மமெடுத்து தெரிந்து கொண்டபின்பு, மாயாசம்பந்தமான தேகத்தை வெறுத்து விடுவார்கள். தேகமிருக்கும் பொழுதே அன்பு செலுத்துவது தேகமல்ல தேகத்துக்குள்ளிருக்கும் மனத்திலிருந்து குளிர்ச்சி பொருந்திய அன்பு உண்டாகிறதென்று நீ அறிய வேண்டும். அந்தமனம் பகவானிடத்தில் செலுத்துகிற அன்

பினால் தேகம் நசித்துப் போனாலும், மனம்நசிக்காமல் பக வானிடத்தில் லயமடையும். இதைக்குறித்து இவ்வளவுதான் சொல்லக் கூடும். மேலும் தேகமிருக்கும் பொழுதே, நான் நான் என்று சொல்லிக்கொள்வது இந்தமனந்தான். நானெ ன்று சொல்லப்பட்ட கருவியாகிய மனம் மோட்சமடைகிற தென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதனால், பகவானுக்கும், பக்தனுக்கும் அன்பில்மட்டும் பேதமில்லையே தவிர, உருவத்தில் பேதமுண்டென்றே நினைக்கவேண்டும். அப்படி மோட்சமடைந்தாலும், பகவானுக்குள்ள செங்கோ லாகிய ஆக்கிஞைச்சக்கரம் பக்தனுக்கு செலுத்த முடியாதென் றே சொல்லவேண்டும். எப்படியெனில் ஒரு அரசனுக்கு மற்றவன் பேரில் அவனுடைய நற்குண நற்செய்கைக்குத் தகுந்தபடி அவனிடத்தில் அன்பிருந்தால், அவனுக்குத்தான் சாப்பிடக்கூடிய ராஜபோஜனமளிக்கும்படி உத்திரவிடுவான். தன்னோடுசமமாக ஒரே ஆசனத்தில் உட்காரும்படி சம்மதிப் பான். மேலும் அன்பினால் எதுவேண்டுமானாலும் செய்வான். தானே எழுந்து தாகத்திற்குக் கூட தன்கையினால் ஜலமெடுத் துக் கொடுத்தாலும் கொடுப்பான். அதிக சிநேகம் செய்வான். கொஞ்சநாழிகைகூட அவனைவிட்டும் பிரிந்திருக்கச்சம்மதி யான் இப்படி எத்தனை சிநேகம்செய்தாலும் எத்தனை விதமா யன்பு செலுத்தினாலும தனதிகாரம் செலுத்தும் செங்கோலை மாத்திரம் நீ செலுத்தென்று அவனிடம் கொடுக்கச் சம்மதி யான். இது உண்மை இதைப்போலவே, கடவுளும் தன்தா சர்களாகிய பக்தர்களுக்கு அன்பினால் எது செய்தபோதிலும், பக்தர்கள் கோரிக்கையை நிறைவேற்றினாலும் அவர் களுடன் சரியாய்வுட்கார்ந்து சாப்பிட்டாலும் சாப்பிடுவார். வேறெது, செய்தாலும் செய்வார் அப்படிச் செய்தபோதிலும், தன்ன திகாரமாகிய ஆக்கிஞைச்சக்கரத்தை, நீ செலுத்தென்று பக்தர் களுக்குக் கொடுக்கமாட்டார். இதை நீ உறுதியாக நம்பு இதல்லாமல், வேதாந்தம் படித்துக்கொண்டு, ஆத்மா சமமெ ன்றும் அபின்ன மென்றும் சொல்லி யிருப்பதால், நாமும் கடவுளென்று நினைத்து, தலைகால் தெரியாமல் துள்ளிக்குதிக் காதே, ஏனென்றால் நான் உனக்குப்போதிக்கவேண்டிய கட மையாதலால் அப்படிச்சொன்னேன் மேலும், இன்னொரு சந்தேகம் விளக்குகிறேன். அதென்னவெனில், தாயுமா னவர் பாடலில்,

"சித்தம்தெளிந்து சிவமானேரெல்லோர்க்கும்
கொத்தடிமையான குடிநான்பராபரமே."

என்று பராபரக்கண்ணியில் சொல்லியிருப்பதால், மேலும், மாணிக்கவாசகர் பாடிய பதிகத்தில்,

"சித்தமலமறுவித்து சிவமாக்கியெனையாண்ட
அத்தனெனக்கருளியவா றார்பெருவாரச்சோவே"

என்றுசொல்லி யிருப்பதாலும், அன்பினால்தான் சிவத்தில் லயமடைந்ததைக்குறித்துச் சொல்லியிருக்கவேண்டும். அதாவது, கடவுளுடைய அன்பிற்கு இவர்களுடைய நற்குண நற்செய்கையும், இவர்களுடைய அன்பும் காரணமாயிருந்து இவர்களை பாத்திரமாகச் செய்ததென்று நீயறியவேண்டும். தாயுமானவர் மனமும் சிவத்தில் லயமடைந்ததென்றுமட்டும் சொல்லக்கூடுமே தவிர, அவரே கடவுளானுரென்று சொல்லுவது அவ்வளவு யுக்தமாகத்தோன்றவில்லை. ஆனாலும் இதைக்குறித்த விஷயங்கள் முழுவதும் மகான்கள் நன்குயறிந்திருப்பார்கள். நமக்கு அறிந்துகொள்ள அவ்வளவு சக்தியில்லாததினால் நான் இதற்குமேலொன்றும் சொல்லமுடியாது. இதனுடையமர்மம் தெரிந்துக்கொள்ளவேண்டுமானால் மகாத்மாக்கள் அடைந்திருக்கும் நிலைமையில் இருந்தால் நாம் அறிந்துக்கொள்ளலாமே தவிர, தாழ்ந்த நிலைமையிலிருந்து அறிந்துக்கொள்ளமுடியாது.

மகன்—அம்மா! இப்பொழுது கூடியவரையிலும் விபரதெரிந்துகொண்டேன். அந்த உண்மையான நிலையை நான் பாத்திரனாகும்பொழுது தெரிந்துகொள்ளுகிறேன். மனச்சாட்சி என்று சொல்லுகிறீர்களே அதன்விபரமும் உங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென் றபேட்சிக்கிறேன்.

தாய்—இன்றையதினம் இவ்வளவுதூரம் சொன்னது போதுமென்று நினைக்கிறேன். பின் ஒருநாள் சாவகாசமிருக்கும்பொழுது மனச்சாட்சியைக்குறித்து உனக்குக் கூடுமான வரைக்கும் விவரிக்கிறேன். இன்றைக்கு அதிக நேரமானபடியால் நீசாப்பாடுசெய்துகொண்டு நித்திரைசெய்யப்போ. எனக்கும்வீட்டில் வேலையிருக்கிறபடியால் நான்போகவேண்டும்.

மகன்—சரி, அம்மா! அப்படியே செய்கிறேன்.

---

# மனச்சாட்சி.

## ௬-வது, அத்தியாயம்.

**தாய்**—அருமை குமாரனே! நீ நேற்றையதினம் கேட்ட விஷயங்களை ஞாபகம் வைத்திருக்கிறாயா? பாடங்களைப்படித்து கணக்குகளை முடித்துவிட்டாயா?

**மகன்**—அம்மா! நாளையதினம் லீவானதினால் இன்றையதினம் பாடம்படிக்கவில்லை. நாளையதினம்படித்துவிடுகிறேன் இன்றைக்குச் சில விஷயங்களைக்கேட்டுத் தெரிந்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்திருக்கிறேன். அதென்னவெனில்,—மனச்சாட்சியென்று சொல்கிறார்களே அதன்விபரமென்ன?

**தாய்**—மனச்சாட்சியென்பது கடவுளுடைய தேஜஸ் என்று சொல்லப்படுகிறது. இந்துமார்க்கத்திலிருந்து இதுவரைக்கும் உனக்குச்சொல்லிவந்த விஷயங்களில்சிலது இந்த மனச்சாட்சியில் சம்பந்தப்பட்டிருக்கும். அதையும் விவரித்துச்சொல்லுகிறேன். அதெப்படியென்றால், சூரியன் ஆகாயத்திலிருந்தபடியே தன் கிரணத்தை பூமியில்செலுத்துகிறான் அப்படிச்செலுத்துவதால் பிரகாசமான வெளிச்சம் நமக்குண்டாகிறது. அதைப்போலவே கடவுள் தானிருந்தவிடத்திலிருந்து தன் பிரகாசத்தைச்செலுத்துவார். அந்தபிரகாசம் சூரிய வெளிச்சத்தைவிட அநேகமடங்கு அதிகமாயிருக்கும். எப்படியென்றால், கடவுள்பிரகாசம் காரணமாகவும், சூரியபிரகாசம் காரியமாகவுமிருக்கிறதென்றுநீயறியவேண்டும். அந்தபிரகாசமானது உலகம் முழுவதும் பிரகாசிக்கும். இப்படியிருக்கபாரபக்ஷமில்லாமல்செலுத்தும் கடவுள் வெளிச்சமாகியபிரகாசகிரணம் அவரவர்களுக்குத் தகுந்தபடி மனதில் பிரகாசிப்பிக்கும். இதையும் விவரித்துச் சொல்லுகிறேன். பிரகாசமாயிருக்கும் கடவுள் வெளிச்சம் ஒருவனுக் கதிகமாகவும், ஒருவனுக்குக் குறைவாகவுமிருக்கிறதற்கு சாதாரணமனிதராகிய நாம்தானதற்குக் காரணம்.

மகன்—அம்மா! நாமெப்படி அதற்குக்காரணமாவோம்.

தாய்—எப்படியெனில், பஞ்சபூதத்திலுள்ள தேயு என்னும் அக்கினியானது எல்லாருக்கும் எங்கும் சமமாயிருக்கிறதல்லவா? அப்படியிருக்கும்பொழுது சிலவீடுகளில் ஏற்றிவைத்த விளக்கு பிரகாசமாயிருப்பானேன். சில வீடுகளில் ஏற்றிவைத்த விளக்கு மங்கலாயிருப்பானேன்? இதற்குக் காரணமென்ன?

மகன்—எனக்கு இதன்காரணம் தெரியவில்லையே?

தாய்—தெரியாவிட்டால் சொல்லுகிறேன்: கவனமாய்க்கேள். இப்படிப்பிரகாசமாகவும், மங்கலாகவும் விளக்கு எறிகிறதற்குக் காரணம் திரியும் எண்ணெயும்தான். மேலும், கிளாசை நன்ருய்த்துடைத்து வைப்பதும் ஒருகாரணமாகும். இப்படி துடைக்காமலும், எண்ணெயும் திரியும் சரியாய்வைக்காமலும் விளக்கேற்றினல் மங்கலாயிருக்கும். அப்படி மங்கலாயிருக்கும்பொழுது இதுயாருடைய குற்றமென்று தெரிந்துகொண்டாயா?

மகன்—இப்பொழுது தெரிந்துகொண்டேன். விளக்கு நன்ருய் எறியாமலிருக்கிறதற்கு அக்கினிகாரணமல்ல. நாம்தான்காரணம். எப்படியெனில், எண்ணெயும் திரியும் சரியாய்ப்போடாமலும் கிளாசை நன்ருய் துடைக்காமலும் விளக்கேற்றினல் அது நம்முடைய குற்றம்தான்.

தாய்—இதைப்போலவே மற்றெரு திருஷ்டாந்தமும் சொல்லுகிறேன். நாம் வாசம்செய்யும் பொருட்டு வீடுகள் கட்டிக்கொள்ளுகிறேமல்லவா? அப்படி வீடுகள் கட்டும்பொழுது காற்று விஸ்தாரமாய் நுழையும்படி பெரிய ஜன்னல்கள் வைத்து, சூரியவெளிச்சம் தோன்றும்படி கிழக்கு மேற்காக ஜன்னல்கள்வைத்து மேலேயும் பளிங்குக் கண்ணுடிகள் வைத்து வீடுகட்டிக் கொள்ளவேண்டும். இப்படிக்கட்டினல் பார்க்கிறதற் கழகாயிருப்பதும் தவிர, நம்முடைய தேகத்திற்கு

சௌக்கியமாகவுமிருக்கும். இந்த கிரமப்படி வீடுசெட்டாமல் கல்லாலும், காரையாலும் கூரைவேய்ந்து, நன்றாய்சதுரக்கற்களைவைத்து நான்குபக்கமும் ஜன்னலில்லாமல்சுவர்வைத்து வீடுகட்டிக்கொண்டு அதற்குள் வாசம்செய்கிறவன் மேற்சொன்னவிபரப்படி கட்டினவீட்டைபார்வையிடும்பொழுது, நாம் இப்படிக்கட்டிக்கொள்ளாதது நம்முடைய குற்றமென்றுநினைக்காமல், அந்தப்பாழான சூரியன் அந்தவீட்டில் நன்றாய்வெளிச்சங்காட்டுகிறான். அந்தப்போக்கிரித்தனமான காற்றும் நன்றாய் வீசுகிறது. நாம் அவர்களுக்கு என்ன கெடுதல்செய்தோம். நம்முடைய வீட்டில் சூரியபிரகாசமும், காற்றும் இல்லாமல் போவானேன்? என்று இப்படிநினைத்தால் அது அறிவீனமல்லவா? காரியரூபமாகிய சூரியன், சந்திரன், காற்று, மழை இதெல்லாம் எல்லாருக்கும் சமமாக பாரபட்சமில்லாமலிருக்கும்பொழுது, இவைகளுக்கெல்லாம் காரணமாயிருக்கப்பட்ட கடவுள் மாத்திரம் பாரபட்சமா யிருப்பாரா? இருக்கமாட்டார்.

ஆகையால், நமக்குள் மனச்சாட்சிப் பிரகாசம் குறைவாயிருக்கிறது. கடவுளுடைய குற்றமல்ல, பின் அது யாருடைய குற்றமென்றால், அது நம்முடைய குற்றமாகும். எப்படியெனில், நாம் துஷ்கருமமாகிய பாவகிருத்தியங்களை நன்றாய்ச்செய்து அதன்பலனை நன்றாய் மனதில் யேற்றுக்கொண்டிருக்கிறோம். அந்த பாவபலனானது மனத்திலுமிருக்க இடங்கொள்ளாமல் மனதைச்சுற்றிலும் நன்றாய் கல்லினால் கட்டப்பட்ட சுவற்றைப்போல் தடுத்து வளைந்து நிற்கிறது. இப்படியிருக்க, புத்தியின் வழியாய் கடவுள் கிரணம் இறங்கிவரும்பொழுது தடுத்தலாகிய சுவரில்லாவிட்டால்மனத்தில் பிரகாசிக்கும். அந்த புத்திக்கும் மனதிற்கும் நடுவே பாவம் தடுக்கப்பட் டிருக்கிறபடியால், புத்தியும் அப்பொழுது பிரயோஜனப்படாமல் போகிறது.

மகன்—அம்மா! மனம் இப்படிப் பாவச்சுவற்றிற்கு நடுவிலமிழ்ந்து கிடந்தால் எப்பொழுதுதான் கடைத்தேரும்?

தாய்—அப்பா! இந்தப்பாவப்பலனை யனுபவிக்க, அனுபவிக்க, அந்தசுவர் குறைந்துகொண்டேவரும். அப்படிக்குறைந்திருக்கும் சமயத்தில் புத்தியின்வழியாய் ஆத்ம கிரணம் மனதில் பிரகாசிக்கும். இப்படி பிரகாசிக்கும்பொழுது அந்த மனம் பிரகாசத்திற்கு தகுந்தபடி வேலைகள்செய்யும்படி தூண்டும். அப்படி நல்லவேலையாகிய புண்ணியகருமங்கள் செய்வதில் அந்தபலனை யனுபவிக்கும். இதைக்குறித்துதான் உனக்கு முன்னமே படிபடியாய் உயர்வேண்டுமென்று நான் சொன்னது அந்த கிரணங்களில் அதிகமாய் பாவங்கள் தங்கியிருந்தால் இந்த பிரகாசமான ஒளி எப்படிசெல்லக்கூடும்.

இப்படி அதிகபாவமுள்ள இருதயத்தில் கடவுள் பிரகாசமானவெளிச்சம் செல்லவழி இல்லாதபடியால் மனச்சாட்சியென்று ஒருபிரகாசமிருப்பதாக அஞ்ஞானிகளுக்குத் தெரியமாட்டாது ஏனெனில், அவரவர்களுடைய பரிசுத்தத்திற்குத் தகுந்தபடி பிரகாசிப்பிக்கும்.

மகன்—அம்மா! மனச்சாட்சியை இங்லீஷ்காரர்கள்தான் கண்டுபிடித்தார்களாமே. அதுண்மைதானா?

தாய்—நன்று யிருக்கிறது. மனச்சாட்சியை ஒருவர் கண்டுபிடித்தாரென்று சொல்லக் கூடாது. ஏனெனில்,—உலகமுண்டாகிறதற்கு முன்னமே அது இருக்கிறதாக நினைக்கவேண்டும். இதன் விஷயமெல்லாம் பெரியோர்களுக்கு நன்றாய்த்தெரியும்.

மகன்—மேல்நாட்டார் மனச்சாட்சிக்கு விரோதமாய் நடக்கமாட்டார்களென்றும், இந்துக்கள்தான் மனச்சாட்சிக்கு விரோதமாக நடப்பார்களென்றும் சொல்லுகிறார்களே என்?

தாய்—அவர்கள் இங்லீஷ்படித்ததினால் அப்படிச் சொல்லுகிறார்களோ என்னமோ? எனக்கு இங்லீஷ் தெரியாது. தெரியாமற்போனாலும் இதைக்குறித்துக் கொஞ்சம் விளக்கிக் காட்டுகிறேன். எத்தேசத்திலும், எந்தஜாதியிலும் எல்லாரும்

மனச்சாட்சியின்படி நடக்கமாட்டார்களென்று நீயறியவேண்டும். அப்படி நடப்பது சாத்தியமான விஷயமுமல்ல. மேனாட்டாரெல்லாம் மனச்சாட்சியின்படி நடந்தால் அவ்விடங்களில் ஜயிலிலிருக்கக்கூடாது. போலீஸ் ஸ்டேஷனிருக்கக்கூடாது. நியாயஸ்தல மிருக்கக்கூடாது. அவ்விடங்களில் இதெல்லாமிருக்கிறபடியால் மேனாட்டாரெல்லாம் மனச்சாட்சியின்படி நடப்பார்களென்று நீ என்னமாய் சொல்லக்கூடும்? கூடாதாகையால், அவ்விடங்களிலும் மனச்சாட்சியின்படி நடக்கக் கூடியபுத்திமான்கள் இருக்கிறார்கள். மனச்சாட்சிக்கு விரோதமாய் நடக்கக்கூடியவர்களும் இருக்கிறார்கள். எல்லாதேசங்களிலும், நீதிஸ்தலமும், நியாயாதிபதியும், வேலைக்காரர்களும் ஜெயில்களும், போலீஸ் ஸ்டேஷன்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதே போதுமான திருஷ்டாந்தம். இன்னும் வேறென்ன வேண்டும்? நம்முடைய தேசத்திலும், அநேகம்பேர்கள் மனச்சாட்சிக்கு சரியாக நடப்பார்கள். அநேகம் பேர்கள் மனசசாட்சிக்கு விரோதமாக நடப்பார்கள்.

மகன்—அம்மா! நான் தெரியாமல் கேட்டுவிட்டேன். மனச்சாட்சியைக்குறித்து எனக்கு இன்னும் நன்றாய் தெரிவிக்கவேண்டும்?

தாய்—மனச்சாட்சியென்பது உள்வேதமென்று பெரியோர்கள் சொல்வார்கள். பகவானால் கொடுக்கப்பட்ட வேதம் வெளிவேதம். உள்வேதம் அல்லது சூட்சுமவேதம் நன்றாய் விளக்கிக்காட்ட சாத்தியமில்லாதபடியால், வெளிவேதம் நமக்குக் கொடுக்கப்பட் டிருக்கிறதென்று நீயறியவேண்டும். இதைக்குறித்து சில விஷயம் விளக்கிக்காட்டுகிறேன். பகவானால் நமக்குக் கொடுக்கப்பட்ட வெளிவேதத்தில் ஒரு பிரிவுள்ள கர்மகாண்ட விஷயத்தை முன் உனக்குச் சொல்லியிருக்கிறேனல்லவா? அதில் யாகாதிகள் செய்தால் சொர்ககசுகம் வெகுகால மனுபவிக்கலாமென்று சொல்லியிருக்கிறது.

அப்படியாகாதி கிரியைகள் செய்யும்பொழுது மிருகங்களைபலிகொடுப்பது முக்கியமான விஷயமென்று பலிகொடுப்பார்கள். இப்படி பிராமணர்கள் முதலாய் யாகாதிகள் செய்

யும்பொழுது மிருகத்தைக்கொல்லுவார்கள். ஆனால் பழிபாதகம் கொல்லுகிறவர்களைச் சாராமல் மந்திரதேவதைகளால் ஏற்றுக்கொள்ளப்படுமென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்போலவே உள்வேதமாகிய மனச்சாட்சியில் நாம் தெரிந்துக்கொள்ளும்படி சூட்சுமமான விஷயம் அடங்கியிருக்கிறது.

மகன்—அம்மா! அந்தசூட்சுமவிஷயத்தை எனக்குத்தெரிவிக்கவேண்டும்.

தாய்—அப்படியே தெரிவிக்கிறேன். வெளிவேதத்தில் சொல்லியிருக்கிற விபரம்போல உள்வேதத்தில் சொல்லிய விபரமும் என்னவெனில், மனம் என்பவன் யாகதீக்ஷை வகிக்க வேண்டியவன். இவன்தான் யாகத்திற்கறக கங்கணங்கட்டிக்கொண்டு கர்த்தாவாயிருக்க வேண்டும். புத்தியென்பவனை பிரகஸ்பதியென்று நினைப்பதால் புரோகிதனாக வைத்துக் கொள்ள வேண்டும். பிற்பாடு இருதயம் என்று சொல்லப்பட்ட இடத்தில் யாககுண்டம் வெட்டவேண்டும். அதாவது, சீர்திருத்தவேண்டும். அந்த குண்டத்தில் ஞானக்கினியென்னும் தீயை மூட்டவேண்டும். பிற்பாடு காமக்குரோதலோபமோகமதமாச்சரியம் என்னும் அருஷவர்க்கமுள்ள மிருகங்களைக் கொண்டுவந்து பலிகொடுக்க வேண்டும். புத்தி நிச்சயித்திருக்கிற விஷயங்களை மந்திரமாகவைத்துக் கொள்ள வேண்டும். இந்தப்படி யாகம் செய்பவன் ஒரு காலத்திலும் அழிவில்லாத நித்தியபதவியை யடைந்து சுகமாயிருப்பான் இன்னும் இதைப்போலவே பாரத ராமாயணம் புஸ்தகங்களிலுள்ள சூட்சுமக்கருத்தை யறியவேண்டும் பாரதயுத்தத் துவக்கத்தில் குருக்ஷேத்திரமென்னும் இடத்தில் அர்ச்சுனனுக்கு பகவானால் கீதையுபதேசிக்கப்பட்டது. எப்படியெனில் அதினுடைய சூட்சுமம் தெரிவிக்கிறேன் தேகமென்னும் இரதத்தில் ஜீவாத்மாவான அர்ச்சுனனுக்கு பரமாத்மாவான கிருஷ்ணபகவான் மனம் புத்திசித்தம் அகங்கார மென்னும் நாலு வெள்ளைக்குதிரைகளை அர்ச்சுனன் பேரிலுள்ள தயவினால் ஞான முத்திரிகையாகிய தனது கையினால் அவைகளைத்தளரவிடாமல் ஒருமைப் படுத்திக்கொண்டு துர்க்குணமுள்ள இந்திரியங்களாகிய துரியோதனாதிகளை சமூகரித்து விட்டால் நீ சாஸ்வதமோக்ஷமடைவா யென்று உபதேசித்தார்.

இப்படியே இராமாயணத்திலும் தாமஸ இராஜஸ ஸெளகீகமாகிய முக்குணங்களில் சாத்வீகமாகிய விபீஷணனை

சிநேகம் செய்துக்கொண்டு தாமஸ இராஜஸ குணங்களா கிய இராவணன் கும்பகர்ணனை சம்கரித்தார். மேலும் தச இந்திரியங்களாகிய பத்துத்தலைகளையும் வெட்டி யெறிந்தார். பிறகு சந்தோஷமென்னும் சீதையைக்கைக்கொண்டு மோக்ஷ பூமி யென்னும் அயோத்திக்குத் திரும்பினர். வைராக்கிய மென்னும் இலட்சுமணனைப் பிரியாமல் சாஸ்வதப்பட்டா பிஷேகம் செய்துக்கொண்டார்.

இப்படியாகிய விதங்களை நன்றாய், பகுத்தறியாமலிருக் கிறவரைக்கும், மனச்சாட்சியின் படி நடக்க சாத்யமாகாது. மனம், ஐந்து புலன் களுடன் சேர்ந்திருப்பதால், அதன் மய க்கம் தீர, அநேகவித புண்யகருமங்கள் செய்ய வேண்டுமெ ன்று நம் முடையமார்க்கங்களில், பெரியோர்கள், கண்டிப் பாய்ச் சொல்லியிருக்கிறார்கள். அந்நியமதக்காரர்கள், மனச சாட்சியின்படி விக்கிரக ஆராதனை கூடாதென்று மட்டும் எழு துகிறார்களே தவிர, விஷயங்களைப் பகுத்தறிகிற விதமும் அதற்குச்சாதகமானதும் அதிகமாயெழுதுவதில்லை, மேலும் அவர்கள் தானதர்மமாகிய சத்விஷயங்களினால், மோட்சம டைய மாட்டார்களென்றும் கண்டிப்பாய்ச் சொல்லுவார்கள். இந்த சத் கருமங்கள், மனம் புலன்களை விட்டு கொஞ்சம் கொஞ்சமாய் விலகும்படி செய்யும் உபாயமென்று தெரிந்து கொள்ளாமல் அப்படிப்பேசுகிறார்கள். ஏனெனில், மனமயக் கம் விலக, விலக மனச்சாட்சியின் பிரகாசமதிகமாயிருக்கும். மனச்சாட்சி பிரகாச மதிகமாயிருந்தால் அதன் படி நடக்க சாத்தியமாகும். பிரகாசம் சொற்பமாயிருக்கிறவர்கள் இச் சைக்கு வசப்பட்டு, அதன் வழியே போய்க்கொண்டு, திண் டாடிக் கெட்டலைந்து பிறகு மனம் திரும்பி நல்வழியில் செல் வார்கள். ஆகையினால் மனச்சாட்சியின் படி எல்லாரும் நடக் கசாத்தியப்படுமோ? அதனால் நம்முடைய மதத்தில் சொல்லப் பட்டிருக்கிறபடி அனுசரித்துப் படிப்படியா யுயரவேண்டும். இதுதான் நம்மவர்களின் கருத்து. இது தான் சரி.

மகன்—அம்மா! இப்பொழுது கூடியவரையிலும், விஷ யங்கள் இன்னதென்று தெளிவாய்த் தெரிந்து கொண்டேன். நீங்கள் சொன்ன விஷயத்தில் ஒவ்வொன்றிலும் உட்பொ ருள் வெளிப்பொருளென்று தெரியப்படுத்தினது சரியாயிரு க்கிறது. உட்பொருள் காரணமாகவும், வெளிப்பொருள் கா ரியமாகவும் இருக்குமென்றும், காரணம் சூட்சுமமாயும், க்ாரி

யம் ஸ்தூலமாயுமிருக்குமென்றும் தெரிந்துக் கொண்டேன், வெளிப்பொருளாகிய ஸ்தூலமெல்லாம், உட்பொருளாகிய கடவுளின் தோற்றமாகையால் அநித்தியத்துடன் கூடியிருக்கிறதென்று நினைத்தேன். இது சரிதானா?

தாய்—நீ நினைத்தது சரிதான். இன்னும் இதைக்குறித்து விஸ்தாரமாய்ச் சொன்னால் அதிகமாய் வளரும். சுருக்கமாய்ச்சொல்லி நிறுத்திவிடுகிறேன்: நமக்கு இந்த ஜென்மத்திலேயே மனச்சாட்சி பிரகாசம் விருத்தியாவதைக் குறித்துத் தெரிந்து கொள்ளலாம். எப்படியெனில் சிலவருஷத்திற்கு முன்பு நாம் பிசகுகள் செய்திருந்தால், அதைக் குறித்து இப்பொழுது யோசித்தால் அது தப்பிதமென்று நமக்குத்தோன்றும். அதற்கு காரணம் மனச்சாட்சி தான். அதற்காக யோசித்து வேலைகள் செய்யவேண்டும். நாம் செய்யும் வேலைகள் சரியாயிருந்தால் குற்றமில்லை. பிசகாயிருந்தால் பின்னொரு காலத்தில் மனச்சாட்சி யெழும்பி நிற்கும்பொழுது அதிகமாய் நம்மை வாதிக்கும். அந்தவாதனை பொருக்கமாட்டாமல் நாம் வருத்தப் படுவோம். நமக்கு யோஜனை குறைவாயிருப்பதால், சாஸ்திரத்தில் சொன்னபடியும், பெரியோர்கள் யோசித்துச் சொன்ன விஷயங்களையும் கவனமாய்க் கேட்டு அதன் படி நடந்துவந்தால் மனச்சாட்சி நம்மை வாதிக்க மாட்டாது. இந்த விஷயத்தை நீ நன்றாய் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்து மார்க்கத்திலிருந்து மனச்சாட்சி அத்தியாயம் முடிவுவரைக்கும் நீ கேட்டுக்கொண்டு வந்த கேள்விக்குக் கூடியவரையிலும் விடையளித்திருக்கிறேன். மேலும் மனச்சாட்சி பிரகாசமாயிருக்காத தற்கு மற்றும் ஒரு காரணமிருக்கிறது என்னவெனில் கள்ளு சாராயம் முதலிய லாகிரிவஸ்துகளை உபயோகிப்பதில் இருதயத்திலுள்ள சன்னமான பேசி நரம்புகள் சுருங்கி போவதால் பிரகாசம் குறையும் என்று வைத்தியர்கள் கண்டு பரிசோதித் திருக்கிறார்கள். அதனால் எல்லமதங்களிலிலும் கள் சாராயம் சாப்பிடக் கூடாதென்று விலக்கிபிருக்கிறது. அப்படி சாப்பிட்டவர்களுக்கு நம்முடைய மதத்தில் கடினமான பிராயசித்தம் விதித்திருக்கிறார்கள். அதனால், லாகிரிவஸ்துக்கள் சாப்பிட்டால் மனச் சாட்சி பிரகாசமாக இருக்கமாட்டாது மனச்சாட்சிப் பிரகாசமாயிருக்கும்பொருட்டு இந்த விஷயத்திலும் நீ ஜாக்கிறதையாயிருக்க வேண்டும்.

"ஊமைக்கு உளறுவாயன் சண்டப்ர சண்டன்,, என்ற கதைபோல் நான் உளறி வழிந்த சொற்களை நினைவில் வைத்து நீ பிற்காலம் பல கிரந்தங்கள் படித்து புத்திமானு கும் பொழுது இந்தவிஷயங்கள் உண்மைதானு வென்று சந்தேகமற தெரிந்துக்கொள்.

எப்பொழுதும் சாஸ்திர விசாரணை செய்வது யுக்தந்தான். ஆகையால் அதிக சோம்பலினுல் தூங்கிப்போய்விடாமல் பல விஷயங்களையும் அடிக்கடி கவனித்து மனம் மெய்ஞானத்தில் லயமடையும் படி முயற்சி செய் ஆதிமத்யாந்த ரகிதனுகிய அச்சுதனை மறக்காமல் அடிக்கடி தியானம் செய்து அவர் அருளைப் பொற்றுக் கொள் ஆதிமத்யாந்த ரகிதனுகிய அச்சுதனை மறக்காமல் அடிக்க்டி தியானம் செய்து அவர் அருளைப் பெற்றுக்கொள்.

மகன்—அம்மா! தாங்கள் சொல்லிவந்த விஷயங்களை மறக்காமல் ஞாபகத்தில் வைத்து தெய்வதியானம் செய்துக் கொண்டு வருகிறேன்.

தாய்—அப்பா பக்தியில்லாமல் முக்திகிடைக்கமாட்டாது. ஆகையினுல் பக்தியேகாரண மென்று தெரிந்துக் கொண்டு பகவானை பக்தி செய்து கொண்டு வருகிறது மல்லாமல் உன் தோழர்களுக்கும் பேதித்துவர வேண்டும் மேலும் இவ்விஷயங்களை அச்சில்பதிபித்து பாலர் சன்மார்க்கப் போதினி யென்று பெயரிட்டு யாவரும் படிக்க விரும்புகிறேன். இப்புஸ்தகம் படிப்பதில் துர்குணம் நீங்கி நற்குணம் ஓங்கி வளரும் படி பகவானை பிராத்திப்போம்.

பாலர் சன்மார்க்க போதினி

முற்றிற்று.

---

சுபம். சுபம். சுபம்.



